# திருச்செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழ்

## [பகழிக்கூத்தர் அருள் வாக்கு]

போரா தரிக்கு மடியவர்தம
பிறப்பை யொழித்துப் பெருவாழ்வும்
பேறுங் கொடுக்க வரும்பிள்ளைப்
பெருமா னென்னும் பேராளா!
சேரா நிருதர் குலகலகா!
சேவற் கொடியாய்! திருச்செந் தூர்த்
தேவா! தேவர் சிறைமீட்ட
செல்வா! என்றுன் திருமுகத்தைப்
பாரா மகிழ்ந்து முலைத்தாயர்
பரவிப் புகழ்ந்து விருப்புடனைப்
பா!வா வா!என் றுனைப்போற்றப்
பரிந்து மகிழ்ந்து வரவழைத்தால்
வாரா திருக்க வழக்குண்டோ!
வடிவேல் முருகா! வருகவே!
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா! வருகவே!

## [ஸ்ரீ சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள் அருள்வாக்கு]

எய்தற் கரிய வருட் சுடரே! எல்லாம் வல்ல விறையோனே!
செய்தற் கரிய வளத்தணிகைத் தேவே! உன்ற னாறெழுத்தை
யுய்தற் பொருட்டிங் குச்சரித்தே யுயர்ந்த திருவெண் ணீறிட்டால்
வைதற் கில்லாப் புகழுச்சிவரும் வன்க ணென்றும் வாராதே.

சேரு முக்கட் கனிகனிந்த தேனே! ஞானச் செழுமணியே!
யாரும் புகழுந் தணிகையெம தன்பே! உன்ற னாறெழுத்தை
யோரு மனத்தி னுச்சரித்திங் குயர்ந்த திருவெண் ணீறிட்டாற்
பாரும் விசும்பும் பதஞ்சாரும் பழங்க ணென்றுஞ் சாராதே.

உ

முருகக்கடவுள் துணை

வேலுமயிலுந் துணை

ஸ்ரீ தேவராய சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# கந்தர் சஷ்டி கவசம்

## மூலமும்,

திரிசிரபுரம் பிஷப் கூபர் கல்லூரித் தமிழ் ஆசிரியரும்,

'திருநெறித் தமிழ்க்கழக'த் தலைவரும்,

"செந்தமிழ்ச் செல்வம்"

பத்திராசிரியருமான

வித்வான்

## திரு. அமிர்தம் சுந்தரநாதபிள்ளையவர்கள்

இயற்றிய

## மெய்ப்பொருள் விளக்க விருத்தி உரையும்

பதிப்பாசிரியர்:—

சை. ந. பாலசுந்தரம், தலைவர்,

(மஹான் சை. இரத்தின செட்டியார் பௌத்திரன்),

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புத்தகசாலை,

நெ. 4/34, நயினியப்ப நாயக்கன் வீதி,

பார்க் டவுன் (P. O.), சென்னை.

இவை

மஹான் ஸ்ரீ சாது ரத்தின சற்குரு அவர்களின்

பாதசேகரர்

## அ. மஹாதேவ செட்டியாரவர்களால்

புதிய முறையில் அமைத்து,

[illegible] யாரால் பார்வையிடப்பெற்று,

[illegible]டி செட்டியாரால்

தொகுக்கப்பெற்ற

இன்பரசப் பாக்களடங்கிய

# முருகர் துதிமஞ்சரியும்

இதன் ஈற்றில் சேர்க்கப்பெற்றிருக்கின்றன.

உ

முருகக்கடவுள் துணை

# கந்தர் சஷ்டி கவசம்

## மூலமும் மெய்ப்பொருள் விளக்க விருத்தியுரையும்

---

## முகவுரை

"முருகன் அடியிணை முன்னித் துதித்திடப்
பெருகு மின்பம் பிறங்கிடுந் தானே."

முருகன் பத்தியில் முடுகிய உளத்து அருமணி யனைய அன்பர்களே!

"கந்தர் சஷ்டி கவசம்" என்னும் அரும்பெருநூல் நம் தமிழ் நாட்டுச் சீரிய அன்பர்கள் பலராலும் கொண்டாடிப் போற்றப்பெறும் அழகிய நூல் ஒன்றாகும். இது, கந்தர்+சஷ்டி+கவசம் எனும் மூன்று சொல் இரு சந்தியாலாகிய ஒரு தொடர். இதற்குக் கந்தரைச் சஷ்டி திதியில் ஓதிப் பயனடையப் பெறும் கவசம்போலும் நூலென்பது திரண்ட பொருளாம்.

'கவசம்' வீரர்கள் தம் பகைவர்களோடு போர்செய்யச் செல்லுங்காலத்துத் தம் பகைவர் ஏவும் படைகள் தமக்கு

ஊறு (கெடுதல்) செய்யாதபடி தம் மெய்யில் அணிந்து கொள்ளும் போர்ச் சட்டை.

இக் கவசம் அக் கவசம்போல் தம் அகப்பகை புறப் பகைகளால் தமக்கு எவ்வித ஏதமும் (துன்பமும்) உண்டா காதபடிப் போற்றப்படுதலின், 'கவசம்' என்றார். இது உவமையான் இந் நூலுக்கு ஏற்பட்டதொரு பெயராம்.

இந் நூல், நம் தமிழ் நூல்களுள் சீரிதாகப் பெரிதும் நம்மவரால் பாராட்டப்படுவதொன்றாம். இந் நூலைப் பல்லாயிரம் அன்பர்கள் பக்தியொடு பாடிப் பாராட்டித் துதித்துப் போற்றிக் குமாரக்கடவுளின் அருளால் பேய், பூதம், பில்லி, சூனியம், பிணி, பகை முதலியவற்றால் உண்டாய பல துயரையும் அகற்றி நீக்கி—வென்று நிலைபெற்றுச் சுகவாழ்வில் வாழ்ந்திருக்கின்றனர்.

இந் நூல் மந்திரரூபம் உடையது; மந்திராட்சரங்களும், மந்திரங்களும் பொருந்தி விளங்குவதாகும். இதனைக் குரு முகமாக இருந்து கேட்டுப் பயன்பெற வேண்டுவது.

இந் நூற்கு உரை எழுதுதல் கூடாதென ஒருசாரார் கூறுவர். இது ஒருவகையால் உண்மையேயாயினும், இதனைப் படிப்போர்க்கு இதன் பொருள் ஒருவாறு பிண்டமாக உணர்ந்தாலன்றி மனனம் செய்தல் அருமையாதலின் இந் நூலின் பொருளை ஒருவாறுதொகுத்து வகுத்து உரைத்தாம்.

"எல்லாரு மின்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் மற்றொன் றறியேன் பராபரமே."

என்ற தாயுமானப் பெருந்தகையார் திருவாக்கின்படி, அடியேன், 'எல்லோர்க்கும் நன்மை உண்டாகவேண்டும்' என்

னும் நல்லெண்ணத்தோடு உரை எழுதினேனுதலினுல் 'இந் நூற்கு உரை எழுதக்கூடா'தென்னும் ஒரு சாரார் கொள் கைப்படி 'இது குற்றமாகாது' என நம்புகின்றேன்.

இந்நூலில் சிற்சில இடங்களில் பற்பல ஆழமான கருத் துக்களும், வேதசாஸ்திர உண்மையும் அமைகப்பெற்றிருத்த லின் உரை எழுதப் புகுந்த அடியேற்கும அவனருட் குறை வால் தெரிதா முடியாத சில பாகங்கள் இல்லாமற் போக வில்லை. அவைகளைப் பெரியார்மாட்டுச் சென்று உபதேச முறையாற் கேட்டுத் தெளிந்து பயன் பெறுவார்களாக.

இந்நூலின் பெருமை சிறியேனுல் முற்றும் அறிந்து ஓதத்தக்க தன்றாயினும் ஒருவாறு என் புன்மதியாற் கண்டு முன்னொருகாலத்துச் சொல்லிய,

"காசினியிற் றுன்பகலக் கந்தனருள் பெற்றுயர '
மாசில்லாச் சீரெய்த மாமணியும்—பேசுதிரு
காதலரும் பெற்றுவக்கக் கந்தர் கவசத்தை
ஓத வேவரும் உவந்து.''

என்ற வெண்பாவைக் கண்டுகொள்க.

இந்நூலை இயற்றியருளிய ஆசிரியர் ஸ்ரீ தேவராய சுவாமிகள் என்பது இக் கவசத்துள்,

'தருசமென் றடியர் தழைத்திட வருள்செய்
கந்தர் சஷ்டி கவசம் விரும்பிய

பாலன் றேவ ராயன் பகர்ந்ததைக்
காலையின் மாலையில் கருத்துட னாளும்

ஆசா ரத்துடன் அங்கந் துலக்கி
நேச முடனொரு நினைவது வாகிக்

கந்தர் சஷ்டி கவச மிதனைச்
சிந்தை கலங்காது தியானிப் பவர்கள்'

என்று கூறியிருப்பதால் ஸ்ரீ தேவராய சுவாமிகள் இதனை இயற்றியவர் எனத் தெரிகிறது.

நம் நாட்டவர்கள் தம்மைத் தாமே பெரிதும் பாராட்டிக் கூறிப் புகழ்ந்துகொள்ளுதல் வழக்கமில்லையாதலினால் இவர் தன்னைப்பற்றி ஒன்றும் கூறிற்றிலர். அதனால், இக்காலத்துச் சரித்திர ஆராய்ச்சியிலேயே தலைநிற்பவர் இவரைப்பற்றி அதிகம் ஒன்றும் அறிந்துகொள்ளுதற்கு இல்லாதிருக்கின்றது.

இப் பாவுள் வடமொழிக்கலப்பதிகம் அமைந்துள. மந்திரரூபப் பாக்கள் வடமொழி கலந்தே இருக்கும் என்பது ஒருதலை.

பாப்போக்கும் சொற்செறிவும் உற்றுநோக்குமிடத்து முந்நூறு நானூறு வருடங்களுக்கு இப்பால் இருந்த குகன்பக்தி மிகுந்த ஒருவரால் கூறப்பட்டதொரு நூல் என்பது தெளிவாகிறது.

குமரனைப் பாடியருளியதாலும், சிவபெருமானை இடையிடையே ஏற்றத்தோடு கூறியிருப்பதாலும் சைவ சீலர், குமரக்கடவுள் பக்தியிற் சிறந்தவர் என்று அறியக் கிடக்கின்றது.

இவர், பாண்டி நாட்டினராக இருக்கலாம் என்று ஊகிக்க அந்நாட்டுவழக்குகள் காண்கின்றன. 'லாலா வேசம்' இது தென்பாண்டி நாட்டு வழக்குச் சொல்.

பாண்டிநாட்டிலேயே முருகர் திருத்தலங்கள் அதிகம் இருத்தலாலும், அத் தலங்களையே இவர் அதிகம் பாராட்டிப் பாடியிருப்பதாலும் இவர் பாண்டி நாட்டினர் என எண்ண இடந்தரும்.

முருகர், புகழாயும் நூல்களை விரும்பிப் படிக்கவும் எழுதவும் முடுகிய ஆர்வங் கொண்டுள்ள அடியேனை 'இந் நூற்கு ஒரு விரிவுரை எழுத' என எனதன்பர் கட்டளையிட்டனராதலின் என் சிற்றறிவிற் கெட்டியமட்டில் இதனை எழுதினேன்.

இதில் என் அறியாமையால் குற்றங்களும் இருத்தல் கூடும். அதனை அன்பர்கள் தெரிவித்தால் அடுத்த பதிப்பில் வந்தனத்தோடு தப்பைப் போக்கி ஒப்பைக் கூட்டி உவப் புறுவிப்பாம். அன்பர்கள் இம் முயற்சிபோலப் பல முயற்சி செய்ய என்னை ஊக்கி உற்சாகப்படுத்துவார்களாக, அவர்களுக்குத் திருப்பெருமுருகன் அருள்புரிவானாக.

அ. சுந்தரநாதன்.



முருகக்கடவுள் துணை

ஸ்ரீ தேவராய சுவாமிகள்

அருளிச்செய்த

# கந்தர் சஷ்டி கவசம்

## மூலம்



### காப்பு

நேரிசை வெண்பா

துதிப்போர்க்கு வல்வினைபோந் துன்பம்போ நெஞ்சிற்
பதிப்போர்க்குச் செல்வம் பலித்துக்—கதித்தோங்கும்
நிஷ்டையுங்கை கூடு நிமலரருள் கந்தர்
சஷ்டி கவசந் தனை.

குறள் வெண்பா

அமரரிடர் தீர வமரம் புரிந்த
குமரனடி நெஞ்சே குறி.

### நூல்

நிலைமண்டில ஆசிரியப்பா

க சஷ்டியை நோக்கச் சரவண பவனார்
சிஷ்டருக் குதவுஞ் செங்கதிர் வேலோன்
உ பாத மிரண்டில் பன்மணிச் சதங்கை
கீதம் பாடக் கிண்கிணி யாட

௩ மைய நடஞ்செயும் மயில்வா கனனார்
கையில்வே லாலெனைக் காக்கவென் றுவந்து

௪ வரவர வேலா யுதனார் வருக
வருக வருக மயிலோன் வருக

௫ இந்திரன் முதலா வெண்டிசை போற்ற
மந்திர வடிவேல் வருக வருக

௬ வாசவன் மருகா! வருக வருக
நேசக் குறமகள் நினைவோன் வருக

௭ ஆறுமுகம் படைத்த ஐயா வருக
நீறிடும் வேலவன் நித்தம் வருக

௮ சிரகிரி வேலவன் சீக்கிரம் வருக
சரஹண பவனார் சடுதியில் வருக

௯ ரஹண பவச ரரரர ரரர
ரிஹண பவச ரிரிரிரி ரிரிரி

௧௦ விணபவ சரஹ வீரா! நமோநம
நிபவ சரஹண நிறநிற நிறென

௧௧ வசர ஹணப வருக வருக
அசுரர் குடிகெடுத்த ஐயா! வருக

௧௨ என்னை யாளு மிளையோன் கையில்
பன்னிரண் டாயுதம் பாசாங் குசமும்

௧௩ பரந்த விழிகள் பன்னிரண் டிலங்க
விரைந்தெனைக் காக்க வேலோன் வருக

௧௪ ஐயுங் கிலியும் அடைவுடன் சௌவும்
உய்யொளி சௌவும் உயிரையுங் கிலியும்

௧௫ கிலியுஞ் சௌவும் கிளரொளி யையும்
நிலைபெற் றென்முன் நித்தமு மொளிரும்

௧௬ சண்முகன் றீயும் தனியொளி யொவ்வும்
குண்டலி யாஞ்சிவ குகன்றினம் வருக

௧௭ ஆறு முகமும் அணிமுடி யாறும்
நீறிடு நெற்றியும் நீண்ட புருவமும்

௧௮ பன்னிரு கண்ணும் பவளச்செவ் வாயும்
நன்னெறி நெற்றியில் நவமணிச் சுட்டியும்

௧௯ ஈராறு செவியில் இலகுகுண் டலமும்
ஆறிரு திண்புயத் தழகிய மார்பில்

௨௦ பல்பூ ஷணமும் பதக்கமுந் தரித்து
நன்மணி பூண்ட நவரத்ன மாலையும்

௨௧ முப்புரி நூலும் முத்தணி மார்பும்
செப்பழ குடைய திருவயி றுந்தியும்

௨௨ துவண்ட மருங்கில் சுடரொளிப் பட்டும்
நவரத்னம் பதித்த நற்சீ ராவும்

௨௩ இருதொடை யழகும் இணைமுழந் தாளும்
திருவடி யதனில் சிலம்பொலி முழங்க

௨௪ செககண செககண செககண செகண
மொகமொக மொகமொக மொகமொக மொகென

௨௫ நகநக நகநக நகநக நகென
டிகுகுண டிகுடிகு டிகுகுண டிகுண

௨௬ ரரரர ரர்ரர ரரரர ரரர
ரிரிரிரி ரிரிரிரி ரிரிரிரி ரிரிரி

உஎ டுடுடு டுடுடு டுடுடு டுடு
டகுடகு டிகுடிகு டங்கு டிங்குகு

உஅ விந்து விந்து! மயிலோன் விந்து!
முந்து முந்து முருகவேள் முந்து!

உகூ என்றனை யாளும் ஏரகச் செல்வ!
மைந்தன் வேண்டும் வரமகிழ்ந் துதவும்

௩௦ லாலா லாலா லாலா வேசமும்
லீலா லீலா லீலா விநோதனென்

௩க றுன்றிரு வடியை உறுதியென் றெண்ணும்
என்றலை வைத்துன் இணையடி காக்க

௩உ என்னுயிர்க் குயிராம் இறைவன் காக்க
பன்னிரு விழியால் பாலனைக் காக்க

௩௩ அடியேன் வதனம் அழகுவேல் காக்க
பொடிபுனை நெற்றியைப் புனிதவேல் காக்க

௩ச கதிர்வே லிரண்டு கண்ணினைக் காக்க
விதிசெவி யிரண்டும் வேலவர் காக்க

௩ரு நாசிக ளிரண்டும் நல்வேல் காக்க
பேசிய வாய்தனைப் பெருவேல் காக்க

௩சூ முப்பத் திருபல் முனைவேல் காக்க
செப்பிய நாவைச் செவ்வேல் காக்க

௩எ கன்ன மிரண்டும் கதிர்வேல் காக்க
என்னிளங் கழுத்தை இனியவேல் காக்க

௩அ மார்பை யிரத்ந வடிவேல் காக்க
சேரிள முலைமார் திருவேல் காக்க

௩௯ வடிவே லிருதோள் வளம்பெறக் காக்க
பிடரிக ளிரண்டும் பெருவேல் காக்க

௪௦ அழகுடன் முதுகை அருள்வேல் காக்க
பழுபதி னாறும் பருவேல் காக்க

௪௧ வெற்றிவேல் வயிற்றை விளங்கவே காக்க
சிற்றிடை யழகுறச் செவ்வேல் காக்க

௪௨ நாணாங் கயிற்றை நல்வேல் காக்க
ஆண்குறி யிரண்டும் அயில்வேல் காக்க

௪௩ பிட்ட மிரண்டும் பெருவேல் காக்க
வட்டக் குதத்தை வல்வேல் காக்க

௪௪ பணைத்தொடை யிரண்டும் பருவேல் காக்க
கணைக்கால் முழந்தாள் கதிர்வேல் காக்க

௪௫ ஐவிர லடியிணை அருள்வேல் காக்க
கைக ளிரண்டும் கருணைவேல் காக்க

௪௬ முன்கை யிரண்டும் முரணவேல் காக்க
பின்கை யிரண்டும் பின்னவ ளிருக்க

௪௭ நாவிற் சரஸ்வதி நற்றுணை யாக
நாபிக் கமலம் நல்வேல் காக்க

௪௮ முப்பா னாடியை முனைவேல் காக்க
எப்பொழு துமெனை எதிர்வேல் காக்க

௪௯ அடியேன் வசனம் அசைவுள நேரம்
கடுகவே வந்து கனகவேல் காக்க

௫௦ வரும்பக றன்னில் வச்சிரவேல் காக்க
அரையிரு டன்னில் அனையவேல் காக்க

ருக ஏமத்திற் சாமத்தில் எதிர்வேல் காக்க
தாமத நீக்கிச் சதுர்வேல் காக்க

ருஉ காக்க காக்க கனகவேல் காக்க
நோக்க நோக்க நொடியி னோக்க

ருங தாக்க தாக்க தடையறத் தாக்க
பார்க்க பார்க்க பாவம் பொடிபட

ருச பில்லி சூனியம் பெரும்பகை யகல
வல்ல பூதம் வலாஷ்டிகப் பேய்கள்

ருரு அல்லற் படுத்தும் அடங்கா முனியும்
பிள்ளைக டின்னும் புழைக்கடை முனியும்

ருசு கொள்ளிவாய்ப் பேய்களும் குறளைப் பேய்களும்
பெண்களைத் தொடரும் பிரமரா க்ஷதரும்

ருஎ அடியனைக் கண்டால் அலறிக் கலங்கிட
இரிசிகாட் டேரி இத்துன்ப சேனையும்

ருஅ எல்லினு மிருட்டிலும் எதிர்படு மண்ணரும்
கனபூசை கொள்ளும் காளியோ டனைவரும்

ருகூ விட்டாங் காரரும் மிகுபல பேய்களும்
தண்டியக் காரரும் சண்டா ளங்களும்

சுO என்பெயர் சொலவும் இடிவிழுந் தோடிட
ஆனை யடியினில் அரும்பா வைகளும்

சுக பூனை மயிரும் பிள்ளைக ளென்பு
நகமு மயிரும் நீண்முடி மண்டையும் ,

சுஉ பாவைக ளுடனே பலகல சத்துடன்
மனையிற் புதைத்த வஞ்சனை தனையும்

௬௩ ஒட்டியச் செருக்கும் ஒட்டியப் பாவையும்
காசும் பணமும் காவுடன் சோறும்

௬௪ ஓதுமஞ் சனமும் ஒருவழிப் போக்கும்
அடியனைக் கண்டால் அலைந்து குலைந்திட

௬௫ மாற்றான் வஞ்சகர் வந்து வணங்கிட
காலதூ தாளெனைக் கண்டாற் கலங்கிட

௬௬ அஞ்சி நடுங்கிட அரண்டு புரண்டிட
வாய்விட் டலறி மதிகெட் டோட

௬௭ படியினில் முட்டப் பாசக் கயிற்றால்
கட்டுட னங்கம் கதறிடக் கட்டு

௬௮ கட்டி யுருட்டு கால்கை முறிய
கட்டு கட்டு கதறிடக் கட்டு

௬௯ முட்டு முட்டு முழிகள் பிதுங்கிட
செக்கு செக்கு செதிற்செதி லாக

௭௰ சொக்கு சொக்கு சூர்ப்பகைச் சொக்கு
குத்து குத்து கூர்வடி வேலால்

௭௧ பற்று பற்று பகலவன் றணலெரி
தணலெரி தணலெரி தணலது வாக

௭௨ விடுவிடு வேலை வெருண்டது வோட
புலியு நரியும் புன்னரி நாயும்

௭௩ எலியுங் கரடியும் இனித்தொடர்ந் தோடத்
தேளும் பாம்பும் செய்யான் பூரான்

௭௪ கடிவிட விஷங்கள் கடித்துய ரங்கம்
ஏறிய விஷங்கள் எளிதுட னிறங்க

௬௫ ஒளிப்புஞ் சுளுக்கும் ஒருதலை நோயும்
வாதஞ் சயித்தியம் வலிப்புப் பித்தம்
௬௬ சூலைசயங் குன்மம் சொக்குச் சிரங்கு
குடைச்சல் சிலந்தி குடல்விப் பிரிதி
௬௭ பக்கப் பிளவை படர்தொடை வாழை
கடுவன் படுவன் கைத்தாள் சிலந்தி
௬௮ பற்குத் தரணை பருவரை யாப்பும்
எல்லாப் பிணியும் என்றனைக் கண்டால்
௬௯ நில்லா தோட நீயெனக் கருள்வாய்
ஈரே ழுலகமும் எனக்குற வாக
௭௦ ஆணும் பெண்ணும் அனைவரு மெனக்கா
மண்ணா ளரசரும் மகிழ்ந்துற வாகவும்
௭௧ உன்னைத் துதிக்க உன்றிரு நாமம்
சரஹண பவனே! சைலொளி பவனே!
௭௨ திரிபுர பவனே! திகழொளி பவனே!
பரிபுர பவனே! பவமொளி பவனே!
௭௩ அரிதிரு மருகா! அமரா பதியைக்
காத்துத் தேவர்கள் கடுஞ்சிறை விடுத்தாய்
௭௪ கந்தா! குகனே! கதிர்வே லவனே!
கார்த் திகை மைந்தா! கடம்பா! கடம்பனை
௭௫ இடும்பனை யழித்த இனியவேள் முருகா!
தணிகா சலனே! சங்கரன் புதல்வா!
௭௬ கதிர்கா மத்துறை கதிர்வேள் முருகா!
பழநிப் பதிவாழ் பால குமாரா!

௨௭ ஆவினன் குடிவாழ் அழகிய வேலா !
செந்தின்மா மலையுறும் செங்கல்வ ராயா !

௨௨ சமரா புரிவாழ் சண்முகத் தரசே !
காரார் குழலாள் கலைமக ணன்றாய்

௨௯ என்னா விருக்க யானுனைப் பாட
எனைத்தொடர்ந் திருக்கும் எந்தை முருகனைப்

௧௦ பாடினே னாடினேன் பரவச மாக
ஆடினே னாடினேன் ஆவினன் பூதியை

௧௧ நேச முடன்யான் நெற்றியி லணியப்
பாச வினைகள் பற்றது நீங்கி

௧௨ உன்பதம் பெறவே உன்னரு ளாக
அன்புட னிரக்ஷி ! அன்னமுஞ் சொன்னமு

௧௩ மெத்தமெத் தாக வேலா யுதனார்
சித்திபெற் றடியேன் சிறப்புடன் வாழ்க

௧௪ வாழ்க வாழ்க மயிலோன் வாழ்க
வாழ்க வாழ்க வடிவேல் வாழ்க

௧௫ வாழ்க வாழ்க மலைக்குரு வாழ்க
வாழ்க வாழ்க மலைக்குற மகளுடன்

௧௬ வாழ்க வாழ்க வாரணத் துவசம்
வாழ்க வாழ்கவென் வறுமைக ணீங்க

௧௭ எத்தனை குறைகள் எத்தனை பிழைகள்
எத்தனை யடியேன் எத்தனை செய்தால்

௧௮ பெற்றவ னீகுரு பொறுப்ப துன்கடன் ;
பெற்றவள் குறமகள் பெற்றவ ளாமே ;

கூகூ பிள்ளையென் றன்பாய்ப் பிரிய மளித்து
மைந்தனென் மீதுன் மனமகிழ்ந் தருளித்

க00 தஞ்சமென் றடியர் தழைத்திட வருள்செய்
கந்தர் சஷ்டி கவசம் விரும்பிய

க0க பாலன் றேவ ராயன் பகர்ந்ததைக்
காலையின் மாலையிற் கருத்துட னாளும்

க0உ ஆசா ரத்துடன் அங்கந் துலக்கி
நேச முடனொரு நினைவது வாகிக்

க0ங கந்தர் சஷ்டி கவச மிதனைச்
சிந்தை கலங்காது தியானிப் பவர்கள்

க0ச ஒருநாள் முப்பத் தாறுருக் கொண்டு
ஓதியே செபித்து உகந்துநீ றணிய

க0ரு அஷ்டதிக் குள்ளோர் அடங்கலும் வசமாய்த்
திசைமன்ன ரெண்மர் செயல தருளுவர்;

க0சு மாற்றல ரெல்லாம் வந்து வணங்குவர்;
நவகோண் மகிழ்ந்து நன்மை யளித்திடும்;

க0எ நவமத னெனவும் நல்லெழில் பெறுவர்;
எந்த நாளுமீ ரெட்டா வாழ்வர்;

க0அ கந்தர்கை வேலாங் கவசத் தடியை
வழியாய்க் காண மெய்யாய் விளங்கும்;

க0கூ விழியாற் காண வெருண்டிடும் பேய்கள்;
பொல்லா தவரைப் பொடிபொடி யாக்கும்;

கக0 நல்லோர் நினைவில் நடனம் புரியும்
சர்வ சத்துரு சங்கா ரத்தடி

கககக அறிந்தென துள்ளம் அஷ்டலட் சுமிகளில்
வீரலட் சுமிக்கு விருந்துண வாகச்

கககஉ சூரபத் மாவைத் துணித்தகை யதனல்
இருபத் தேழ்வர்க் குவந்தமு தளித்த

கககங குருபரன் பழநிக் குன்றினி லிருக்கும்
சின்னக் குழந்தை சேவடி போற்ற

கககச எனைத்தடுத் தாட்கொள என்றன துள்ளம்
மேவிய வடிவுறும் வேலவ போற்றி

கககரு தேவர்கள் சேனு பதியே போற்றி
குறமகள் மனமகிழ் கோவே போற்றி

கககசு திறமிகு திவ்விய தேகா போற்றி
இடும்பா யுதனே இடும்பா போற்றி

ககஎ கடம்பா போற்றி கந்தா போற்றி
வெட்சி புனையும் வேளே போற்றி

ககஅ உயர்கிரி கனக சபைக்கோ ரரசே!
மயிலட மிருவோய்! மலரடி சரணம்;

கககக சரணஞ் சரணஞ் சரஹண பவஓம்
சரணஞ் சரணஞ் சண்முகா சரணம்.

*கந்தர் சஷ்டி கவசம் மூலம் முற்றிற்று.*





ஓம்

திருமுருகன் திருவடியே துணை

# கந்தர் சஷ்டி கவசம்

## மூலமும் மெய்ப்பொருள் விளக்க விருத்தி உரையும்

### காப்பு

நேரிசை வெண்பா

துதிப்போர்க்கு வல்வினைபோந் துன்பம்போ நெஞ்சிற்
பதிப்போர்க்குச் செல்வம் பலித்துக்—கதித்தோங்கும்
நிஷ்டையுங்கை கூடு நிமல ரருள்கந்தர்
சஷ்டி கவசந் தனை.

[பதவுரை]

நிமலர் = மலரகிதராகிய சிவபெருமான்
அருள் = கருணையினாற் பெற்றருளிய
கந்தர் = கந்தக்கடவுளின்
சஷ்டி = சஷ்டி திதியிலே ஓதுதற்குரிய

| | | |
|---|---|---|
| கவசந்தனை | = | காக்கும் பெருமையையுடைய கவச மந்திரத்தை |
| துதிப்போர்க்கு | = | (பக்தியோடு) தோத்திரஞ் செய்து கந்தக்கடவுளைத் துதிப்பவர்களுக்கு |
| வல்வினை | = | வல்லமையையுடைய பழைய தீவினைகளெல்லாம் |
| போம் | = | நீங்கிவிடும்; |
| துன்பம் | = | வருத்தங்களெல்லாம் |
| போம் | = | அகன்றுவிடும்; |
| நெஞ்சில் | = | உள்ளத்தின்கண்ணே |
| பதிப்போர்க்கு | = | இந்த மந்திரத்தை ஊன்றவைப்போர்க்கு |
| செல்வம் | = | பொருட் செல்வம் |
| பலித்து | = | வாய்த்து |
| கதித்தோங்கும் | = | அந்தப் பொருட்செல்வம் அதிகரித்து வளரும்; |
| நிஷ்டையும் | = | யோகசாதனையும் |
| கைகூடும் | = | சித்திக்கும். |

[விருத்தியுரை]

1. (i) 'துதிப்போர்க்கு, நெஞ்சிற் பதிப்போர்க்கு வல்வினை போம்,' (ii) 'துன்பம் போம்,'(iii) 'செல்வம் பலித்துக் கதித்தோங்கும்,' (iv) 'நிஷ்டையுங் கைகூடும்' என நான்கு சித்திகள் கைவரப் படுமென்றார்.

2. 'துதிப்போர்க்கு வல்வினைபோம்' என்றதனால் துதியாதவர்க்கு வல்வினை போகாது என்பது அருத்தாபத்தியாற் பெறப்படும்.

3. 'வல்வினை' என்றது நீங்கற்கரிய வலிய வினை என்ற தாயிற்று. இதனால் கந்தர் சஷ்டி கவசத்தின் ஆற்றல் கூறப்பெற்றது, "போகாத்துயரம் போம்" என்றுற்போல.

4. 'துன்பம்' என்றது பிறவித் துன்பத்தை.

5. செல்வம் பலித்த லாவது செல்வஞ் சேருதல். கந்தர் சஷ்டி கவசத்தை செஞ்சிற் பதித்திடும் பண்ணியச் செயலால் செல்வம் பலிக்கும் என்பதாம, அவ்வாறு பலிக்க செல்வம் அழியாது நிலையூன்றி நிற்றல்மாத்திரமன்றி மேலும மேலும பெருகி ஓங்கும் என்றார். எனெனின், செல்வம் தோன்றின அவாவைப் பெருக்கி, 'மேலும் மேலும செல்வஞ் சேரவேண்டும், சேர்க்கவேண்டும்' என்று எண்ணுவராதலின் 'கதிதசோவதும்' என்றார். இதனாலன்றே,

"ஆறுதவாப்பெருக்கும்"

எனத் 'தமிழ்விடுதூது' டையார், செல்வத்தைப்பற்றிக் கூறினர். ஈண்டு அது கருதற்பாலதாம்.

6. வினையே துன்பத்தை விளைவிப்பதாதலின், துன்பத்திற்கு வித்தாகிய பண்டைவினைகள் நீங்குதல பெற்றும். துன்பற்றிருத்தலே இன்பமாதலின், இன்பஞ் சித்சியாம் என்பது சொல்லாமலே யமைந்திருத்தல் காண்க.

7. உலக வாழ்க்கைக்குச் செல்வம இன்றியமையாதது.

"முனிவரு மன்னரு முன்னிய பொன்னுன் முடியும்,"

என்று ஸ்ரீமணிவாசகப்பெருமான் திருவாய்மலர்ந்தருளியபடியும்,

[திருக்குறள்—அருளுடைமை-எ-ம் பாடல்.]

"அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லா கியாங்கு."

என்ற திருவள்ளுவர் திருவாக்கின்படியும் உலக வாழ்விற்கு இன்றியமையாததாகிய செல்வம் சேரும் பெருகும் என்றார்.

8. துன்பம் நீங்கி உலகவாழ்வு பெற்று இருப்பதுதன்னி னும் மேம்பட்டது நிட்டைஇன்பம் ஆதலின் 'நிஷ்டையுங் கை கூடும்' என்றார்.

'நிஷ்டையும்' என்றதில் உள்ள உம்மை உயர்வுச்சிறப்பும்மை.

'நிஷ்டை' என்றது யோகநிஷ்டையை. நிஷ்டை பெற்றார் ஞானம் பெறுதல் ஒருதலையாதலின் பொருள், இன்பம், ஞானம் சித்தியாம் என்க.

இனி, புருஷார்த்தம் நான்கனுள் பொருள், இன்பம், வீடு பேற்றிற்குரிய ஞானம் மூன்றுங் கூறப்பெற்றதே, அறம் என்னும் எனின், கந்தர் சஷ்டியை ஓதலும் கந்தனைப் பத்தி செய்தலுமே அறம் ஆதலின், அறம்முதல நான்கும் கந்தர் சஷ்டியை ஓதித் துதித்தார்க்கு எய்தும் என்று கூறினர் ஆயிற்று.

9. பதித்தல் - நாட்டல்; நிலையாக ஊன்றச்செய்தல்.

10. ஓரிடத்தும் நிலை நில்லாது சகடக்கால்போலச் செல் லும் இயல்பினது ஆதலின் காரண இடுகுறியாகப் பொருட் செல் வத்தைச் 'செல்வம்' என்றார்.

11. கதித்தல் - 'மிகப் பெருகுதல்' என்ற பொருளது.

12. 'நிஷ்டை' என்றது யோகநிட்டையில் நின்று இறைவ னைத் தன்னுள்ளேயே கண்டு களிப்புறுதலை.

13. 'நிமலர்' என்றது சிவபெருமானை; சிவபெருமானே மல ரகிதர் ஆதலின். 'நி' என்பது வடமொழியில் இன்மைப்பொரு ளைக் காட்டவந்த அடைமொழி; இதனை உபசர்க்கம் என்பர் வட நூலார். 'நிமலர்' என்பது வடசொல் என்பர். 'நிமலர்' 'கந்தர்' என்பவற்றுள்ள அர் விகுதி உயர்வுப் பன்மை விகுதி.

14. கந்தக்கடவுள் ஆறு திருக்குழந்தை வடிவமாக இருந்து உமாதேவியார் சேர்த்துத் தழுவி எடுத்தபோழ்து ஒருருவம் பெற் றார் ஆதலின் கந்தர் எனப் பெயர் பெற்றார். கந்தர்-'ஒன்றுசேர்க்

கப் பெற்றவர்' என்பது பொருள். இன்னும் பல காரணங்கள் கூறுவாரும் உண்டு. இதனை,

[கந்தபுராணச் சுருக்கம்-உற்பத்தி காண்டம்-சூ-ம் செய்யுள்]

"அம்மை யெடுத்துழி யாறுரு மைந்த
 ஞறு முகங்களு மாறிரு கையுஞ்
 செம்மை பொருந்தொரு மேனியு மாகச்
 செப்பினை யொத்த திருந்தன நின்று
 பொம்ம லுடன்சொரி பாலத ருந்திப்
 பொற்புறு சிற்பர னைப்பணி விக்க
 நம்மை யளித்திடு கந்தனை யன்பா
 ஞதனை டுத்துர மீதில ணைத்தே."

என்ற பாவாலும் அறியலாம்.

15. சஷ்டி - ஆறாவது திதி. ஆறு திருவுரு உடையவர் ஆக இருந்தமையாலும், ஆறுமுக முடையவர் ஆக இருப்பதாலும், ஆறெழுத்து மந்திரத்திற்கு உரியவர் ஆக இருப்பதாலும் முருகக் கடவுளை ஆறாவது திதியில் துதிப்போர் ஏனைய நாட்களில் துதிப் பவர் பெறும் பேற்றைவிட அதிகம் பேறு பெறுவர் என்பர் பெரியார்.

16. கவசம் - சத்துருக்களின் ஆயுதங்கள் உடலிற் ரூக்கி ஊறு செய்யாதிருப்பதற்கு வீரர் மெய்யில் அணிந்துகொள்ளும் இரும்புமுதலிய லோகங்களாற் செய்த சட்டை.

இம் மந்திரம் ஓதித் துதிப்போர்க்கு ஊறு இன்றிக் காத்தரு ளுந் திறன் உடைமைபற்றிக் 'கவசம்' என்றூர்.

கவசம் போன்றதைக் 'கவசம்' என்றது உவமை ஆகுபெயர்.

17. கந்தக்கடவுளைச் சஷ்டி திதியில் ஓதுவதற்கென்று ஏற் பட்ட மந்திரம் ஆதலின் இதற்குக் 'கந்தர் சஷ்டி கவசம்' எனப் பேராயிற்று.

18. *ஐப்பசி மாதத்தில் பிரதமைமுதல் விரதம் அனுஷ்டித்து இம் மந்திரத்தை ஓதி, சஷ்டியில் அதனைப் பூர்த்திசெய்ய வேண்டும். இங்ஙனம் மந்திரம் ஓதும்போது நாள் ஒன்றிற்கு முப்பத்தாறு உரு வீதம் ஜெபிக்கவேண்டும்.*

‘ஒருநாள் முப்பத் தாறுருக் கொண்டு
ஓதியே செபித்து உகந்து நீறணிய,’’

*என்பதனால் இதை உணரலாம்.*

*இன்னும் கார்த்திகை மாதந் தொடங்கி ஒருவருடத்தில் வரும் இருபத்துநான்கு சஷ்டிகளிலும் இத்தகைய மந்திரங்களை ஓதிக் கந்தக்கடவுளை வழிபடுவதனாலும் மேம்பாடு உண்டாகும். இதனைக் கந்தபுராணமுதலிய நூற்களிற் பரக்கக் காணலாம். இவ் வெண்பாவால் நூற்பயன் கூறப்பெறுகிறது. இது பின்னோர் கூற்றெனத் துணிதற்பாற்று.*

## இதுவும் அது

### குறள் வெண்பா

அமரரிடர் தீர அமரம் புரிந்த
குமரனடி நெஞ்சே குறி.

[பதவுரை]

நெஞ்சே = என்றன் உள்ளமே! (நீ தொடங்கிய காரியம் முட்டின்றி இனிது முடிதற்பொருட்டு)

அமரர் = தேவேந்திரன்முதலிய தேவர்கள்

இடர் = துன்பம்

தீர = தொலையும்படி

அமரம் புரிந்த = சூரன் பதுமன் முதலிய அசுரர்களோடு போர்செய்து அவர்களை அழித்தருளிய

குமரன் = கந்தக்கடவுளினுடைய
அடி = திருப்பாதங்களை
குறி = உள்ளி வணங்குவாயாக.

[விருத்தியுரை]

1. அமரர் - 'மரணமில்லாதவர்' என்னும் பொருளது.

அமிர்தம் உண்ட திறத்தால் நரை, திரை, மூப்பின்றி நெடுங் காலம் வாழ்வர், தேவர் ஆதலின், 'அமரர்' என்றார்.

தேவரும் ஒருகாலத்து அழிவர். மரணத்தை, நெடுங்காலம் வாழ்ந்தபின் அடையும் தேவரை 'அமரர்' என்றது, மங்கலவழக்கு என்பர்.

"மாலாதி தேவர் மாள்வர் மாதுமையாள் பாகன் நிற்பன்"
என்றது காணத்தகுந்தது.

2. 'இடர்' என்றது சூரன் பதுமன்முதலிய அசுரர்களால் தேவர்களுக்கு உண்டாகிய துயரத்தை.

3. தேவர்தம் பெருந்துயர் தீர்த்தருளிய குமரனுக்கு உன் துன்பந் தீர்ப்பது பாரம அல்ல என்பார் 'அமரரிடர் தீர' என்று கூறினார்.

4. மாரனைக் குச்சிதப்படுத்தும் திருவடிவு உடையவர் ஆதலின் 'குமாரன்' என்னும் திருநாமம் ஏற்பட்டது.

(கு+மாரன்) இது வடசொற்களின் சந்தி. இளைய திருக் கோலம் உடையர் ஆதலின் 'குமரன்' என்றாயிற்று என்னலும் ஆம்.

இதனாலன்றோ நக்கீரரும்

[திருமுருகாற்றுப்படை-தோத்திரப்பா-க.]

—என்றும்

இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே
உளையாய்என் உள்ளத் துறை"

என்றருளினார்.

5. 'குறி' என்றது தியானித்தலை, இறைஞ்சலை.

6. 'அடி' என்றது ஒருமைப் பன்மை மயக்கம்.

இனி, திருப்பாதம் என ஒருமையாகக் கொண்டு ஞான பாதத்தை என்பாரும் உண்டு.

7. குறிக்கும் இடம் நெஞ்சாதலினாலும், குறிக்குந் தொழிலைப் புரிவதும் நெஞ்சாதலின் 'நெஞ்சே' என விளித்தார். இதனை "நெஞ்சறிவுறுத்தல்" என்பார்.

8. இப் பாட்டால் குமரக்கடவுளின் பெருமை எடுத்து ஓதப்பெற்றது. மக்கள், இறைவன் கழல் துதித்தல் செய்வாராயின் பெரும்பயன் பெறுவர்.

கழல் துதித்தார், முற்றும் முழுவுருவுந் துதித்தாரே ஆவர் போலும்.

[திருக்குறள்-கடவுள் வாழ்த்து]

"மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்." (௩)

"கோளிற் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை." (௯)

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்." (௧0)

எனத் திருவள்ளுவரும் திருவடிகளையே குறித்தமை காண்க.

இன்னும் திருவடிக்கே அருள் செய்யும் ஏற்றம் உண்டாதலின் அடியே கருதத்தக்கது என்பர். இதுபற்றியன்றோ,

"எடுத்த தாளின் அருள் வயங்க"

என்றார் பெரியார்.

9. 'அமரம்' என்றது அமரை; இதில் அம்-சாரியை. அமர் - போர்.

## நூல்

### நிலைமண்டில ஆசிரியப்பா

க சஷ்டியை நோக்கச் சரவண பவனார்
சிஷ்டருக் குதவுஞ் செங்கதிர் வேலோன்

உ பாத மிரண்டில் பன்மணிச் சதங்கை
கீதம் பாடக் கிண்கிணி யாட

௩ மைய நடஞ்செயும் மயில்வா கனனார்
கையில்வே லாலெனைக் காக்கவென் றுவந்து.

[பதவுரை]

| | | |
|---|---|---|
| சரவணபவன் | = | சரவண மடுவில் தோன்றினவனும் |
| ஆர் | = | (அன்பின்) அமைந்த |
| சிஷ்டருக்கு | = | அடியார்களுக்கு |
| உதவும் | = | உதவியைச் செய்கின்ற |
| செம் கதிர் | = | செவந்த கிரணங்களையுடைய |
| வேலோன் | = | வேலாயுதத்தை உடையவனும், |
| பாதம் இரண்டில் | = | தன்னுடைய இரண்டுதிருவடிகளிலும் |
| பல் மணி | = | பல மணிகள் கோக்கப்பட்ட |
| சதங்கை | = | சதங்கையென்னும் காலணியானது |
| கீதம் பாட | = | இராகத்தைப் பாட |
| கிண்கிணி | = | கிண்கிணியென்னும் ஆபரணமானது |
| ஆட | = | அசைய |

| | |
|---|---|
| மையல் | = மிகுந்த விருப்பத்தைக் காண்போர்க்கு உண்டாக்கத்தக்க |
| நடம் செய்யும் | = திரு நடனத்தைச் செய்கின்ற |
| மயில்வாகனன் | = மயில்வாகனத்தையுடையோனுமாகிய குமாரக்கடவுள் |
| வந்து | = அடியேனாகிய எனது முன்னே வந்து காட்சி தந்தருளி |
| கையில் | = தன் திருக்கரத்தில் |
| ஆர் | = தங்கிய |
| வேலால் | = வேலாயுதத்தினாலே (எனது துன்பங்களை யெல்லாம் நீக்கி) |
| என்னை | = அடியேனாகிய என்னை |
| காக்க என்று | = காக்கக்கடவன் என்று கருதி |
| சஷ்டியை | = சஷ்டிகவசமென்னும்திருமந்திரத்தை |
| நோக்க | = மனத்தால் தியானிக்க. |

[விருத்தியுரை]

1. 'சஷ்டியை' என்றது சஷ்டி கவசத்தை. சஷ்டி திதியில் ஓதும் மந்திரத்தை சஷ்டி என்றது கால ஆகுபெயர்.

2. 'நோக்கல்' என்றது மனத்தால் நோக்குதல்; இனி, எண்ணுலுங் கண்ணாலும் நோக்க எனினும் ஆம். 'நோக்கம்' என நோக்குங் கருவியாகிய கண்ணைக் கருவியாகுபெயராய் உணர்த்தும் என்பதும் அறிக.

3. 'சரவணபவனார்' சரவணமடுவில் உற்பவித்த முருகக் கடவுளைக் குறித்தது. இதனை,

> "காமர்பூஞ் சரவணத்தின் பாங்கரின் வருதலாலே
> சரவண பவனென் றுன்,"

என்ற கந்தபுராணச் செய்யுளின் அடிகளாலும் அறியலாம்.

4. சிஷ்டர் - அன்பர், அடியார்.

5. 'உதவுதல்' என்றது ஈண்டு அன்பர்கள் துயர் தீர்த்தற் பொருட்டு அன்பர்களுக்கு இடர் விளைக்கும் கொடியார்மேற் பிர யோகித்தலை.

6. முருகப்பிரான் திருக்கரத்துவேல் அசுரர் உடலிற் செலுத் தப்பெற்று இரத்தந்தோய்ந்து பிரகாசித்திடலால் 'செங்கதிர்வேல்' என்றார்.

7. வெல்லுவது வேல்; இதற்கு வெல் - பகுதி; காரணப் பெயர். வேலாயுதத்தை யுடையவன் வேலன். முருகர்க்குப் பல ஆயுதங்களும் உண்டாயினும் இவ் வேல் உமாதேவியாரிட மிருந்து பெற்றது ஆதலாலும், சூரன் பன்மன்முதலியரை வேலால் வென் றதனாலும், இது ஞானவடிவ மாதலினாலும் வேலைச் சிறப்பாகக் கூறினர். இதனான்றே கந்தபுராணமுடையாரும்

"திருக்கைவேல் போற்றி போற்றி"

என இரண்டு போற்றி கூறினார்.

7. 'பன்மணிச் சதங்கை' - சதங்கை ஒலிக்க உள்ளே பரற் களுக்குப் பதிலாக மணிகள் இடப்பட்டுள்ளமையினால் இவ்வாறு கூறினார். இனி, 'பலவாகிய அழகிய சதங்கைகள்' எனப் பொருளு ரைப்பாரும் உண்டு. பல + மணி என்பது 'பன்மணி' என்றாயிற்று.

[நன்னூல்-கஎ௦-ம் சூத்திரம்]

"பலசில வெனுமிவை தம்முன் றாம்வரின்
இயல்பு மிகலு மகர மேக
லகரம் றகர மாகலும் பிறவரின்
அகரம் விகற்ப மாகலு முளபிற."

என்றது விதி.

8. சதங்கை ஒலிப்பது தாளக்கழுவியும் 'கீதம் எழும்படி யும் ஒலித்தலின் 'கீதம் பாட' என்றார்.

9. *கிண்கிணி-இது ஒருவகைக் கால் அணி; 'கிண்கிணீர் என ஒலித்தலின் இதற்கு இப் பெயர் வந்தது' என்பர்.*

10. *கண்டார் அதிவிருப்பங்கூர நடிக்கின்றமையாலும், ஐந்தொழில் நடாத்த நடிக்கின்றமையாலும் 'மையல் நடம்' என்றார்.*

11. *சூரன், பதுமன் சம்மார காலத்தில் கந்தக்கடவுளுக்கு இந்திரனே மயிலாக நின்று தாங்கினமையாலும், மாமரமாக நின்ற சூரனை இருகூறாக்கியபோது ஒன்று மயிலாகவும் ஒன்று சேவலாகவும் உருக்கொண்டு தொழுதபோது மயிலை வாகனமாகவும், கோழியைக் கொடியாகவுங் கொண்டமையால் 'மயில் வாகனனார்' என்று சிறப்பித்துக் கூறினார். ஈண்டு 'ஆர்' உயர்வுப் பொருள்தர வந்த பன்மை விகுதி.*

" இந்திர னனைய காலை
எம்பிரான் குறிப்புந் தன்மேல்
அந்தமி லருள்வைத் துள்ள
தன்மையும் அறிந்து நோக்கிச்
சுந்தர நெடுங்கட் பீலித்
தோகைமா மயிலாய்த் தோன்றி
வந்தனன் குமரற் போற்றி
மரகத மலைபோல் நின்றான்."

*என்ற கந்தபுராணச் செய்யுளால் இந்திரன் முருகர்க்கு மயில் வாகனமான தறியலாம்.*

[கந்தபுராணம் சூரக்கம்-யுத்தகாண்டம்-ம-கஉ0-ம் செய்யுள்]

"ஆறுந்திய முடிகோண்டவ னருளுங்கும ரேச
னமராடியி னைக்குஞ்செய லாலங்கவன் மீதே
ஏறுஞ்செயல் போலப்பொலி நீலச்சிகி மேலே
யேறிக்கொடி தானுக விருஞ்சேவ லுயர்த்தான்."

*என்ற அடிகளால் சூரன் மயிலானமையும், அவன்மேல் முருகப்பிரான் ஏறிக்கொண்டருளியதும் உணரலாம்.*

*அன்பர்களை எல்லாம் வேலொடுவந்து காத்தருளினர் ஆத லின் 'கையில்வே லாலெனைக் காககவென் றுவந்து' என்று கூறினர். இதனை,*

"இன்ன மொருகால் எனதிடும்பைக் குன்றுக்கும்
கோன்னவில்வேற் சூர்தடிந்த கொற்றவா! - முன்னம்
பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும்."

"வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேல் திருக்கைவேல் - வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்புங் குன்றுந்
துளைத்தவே லுண்டே துணை."

*என்னும் வெண்பாக்களினுலும் அறியலாம்.*

*இவ் ஆசிரியப்பாவின் முதலடியின்கண்ணுள்ள 'நோக்க' என் னும் எச்சம் மேல்வரும் அடிகளோடு தொடர்ந்து முடியும். இது ஆதி முதல் அந்தம்வரை ஒரே தொடர். ஒவ்வோர் அடிகளும் குளக மாக நின்று ஈற்றில் முடிவுபெறும். படிப்போர்க்கு விளங்குதற் பொருட்டும், அயர்ச்சியை நீக்குதற்பொருட்டும் பொருண் முடிபு காணு மிடநோக்கிச் சிற்சில அடிகளின் தொகுதிகளைப் பிரித்து அவைகளுக்குத் தனித்தனியே உரை எழுதுகின்றாம்.*

௪ வரவர வேலா யுதனார் வருக
௫ வருக வருக மயிலோன் வருக!

[பதவுரை]

| | |
|---|---|
| *வேலாயுதனார்* | = *வேற்படையையுடைய கந்தக்கடவுள்* |
| *வர வர* | = *(என்னை ஆட்கொண்டு அருள்செய்தற் பொருட்டு)வருவாராக! வருவாராக!!* |

மயிலோன் = மயில் வாகனத்தையுடைய முருகக் கடவுள்

வருக வருக வருக வருக = வந்தருளுக! வந்தருளுக! வந்தருளுக! வந்தருளுக!

[விருத்தியுரை]

1. வருக வருக - அடுக்கு. மகிழ்ச்சியால் அடுக்கியது.

2. வருக வருக வருக வருக - வியங்கோள்.

"இசைநிறை அசைநிலை பொருளோடு புணர்தலென்
றவைமூன் றென்ப ஒருசொல் லடுக்கே"

என்ற தொல்காப்பியச் சூத்திரத்தால் சொற்கள் அடுக்கி வருதலை அறிக.

[நன்னூல்-௩௯௫-ம் சூத்திரம்]

"அசைநிலை பொருணிலை யிசைநிறைக் கொருசொல்
இரண்டு மூன்றுநான் கெல்லைமுறை அடுக்கும்."

என்றதனால் நான்கு முறை அடுக்கிற்று.

௫ இந்திரன் முதலா வெண்டிசை போற்ற
மந்திர வடிவேல் வருக! வருக!

[பதவுரை]

இந்திரன் முதலா = அமரேசன் முதலாக

எண் திசை = எட்டுத் திசைகளிலும் உள்ளவர்களெல்லாம

போற்ற = வணங்க

மந்திரம் = மந்திரோச்சாரணத்தையுடைய

வடி = கூர்மையாகிய

வேல் = முருகக்கடவுளின் வேலாயுதமானது

வருக வருக = (என்னைக் காத்தருளுதற் பொருட்டு) வந்தருளுவதாக! வந்தருளுவதாக!

[விருத்தியுரை]

1. *இந்திரன் தேவர்களுக்கெல்லாம் அரசன் ஆதலின் அவனை முற் கூறினார். கிழக்குத் திக்குக்குரியன். இது மங்கலத் திசை ஆதலின் அத்திக்கிற்கு உரிய இந்திரனைக் குறித்தார்.*

2. *'எண்டிசை போற்ற' என்றது இடவாகுபெயராய் எட்டுத் திக்கிலும் உள்ள தேவர்களைக் குறித்தது. தேவர்கள் துயர் தீர்த்தது வேலாதலின் தேவர்கள் போற்ற என்றார்.*

3. *வேல் மந்திரோச்சாரணத்துடன் செலுத்தப்படுதலின் 'மந்திர வடிவேல்' என்றார்.*

4. *வடிவேல் - நெருப்பிற் காய்ச்சித் தட்டிக் கூர் ஆக்கப் பெற்ற வேல் என்பது பொருள்.*

5. *வருக வருக - அடுக்கு.*

௬ வாசவன் மருகா! வருக! வருக!
நேசக் குறமகள் நினைவோன் வருக!

[பதவுரை]

| | |
|---|---|
| *வாசவன்* | = *இந்திரனுக்கு* |
| *மருகா* | = *மருமகனே!* |
| *வருக வருக* | = *வந்தருளுக! வந்தருளுக!* |
| *நேசம்* | = *பிரியத்தையுடைய* |
| *குறமகள்* | = *குறவரிடத்தில் வளர்ந்த வள்ளியம்மையாரின்* |
| *நினைவோன்* | = *நினைப்பை உடையவனாகிய கந்தக் கடவுள்* |
| *வருக* | = *வந்தருளுக!* |

[விருத்தியுரை]

1. 'மகாவிஷ்ணுவின் குமாரத்திகளாகிய சுந்தரி, அமுதவல்லி என்னும் இருவரும் முருகக்கடவுளை மணந்துகொள்ளத் தவஞ்செய் தனர். முருகப்பிரான் அவர்கள் தவத்திற்கு உவந்து அமுதவல்லி யை இந்திரன் மகளாக வளரும்படிக்கும், சுந்தரியைச் சிவமுனி புத் திரியாகிக் குறவரிடம் வளருமாறுஞ் சட்டளையிட்டுப் பின் மணந்து கொண்டார். அமுதவல்லி இந்திரனிடம் பெண்ணாகி அயிராவதத் தால் வளர்க்கப்பெற்றமையால் தேவயானை என்னும் பெயர் ஆயி ற்று. சூரசம்மாரத்திற்குப் பிறகு இந்திரன் வேண்டுகோளுக் கிணங்கி தேவயானையை மணந்துகொண்டமையால் 'வாசவன் மருகா' என்றார்.

2. சுந்தரி சிவமுனிக்கு மான் வயிற்றிற் பிறந்து வள்ளிக் கிழங்கு கல்லி எடுத்த குழியில் இருந்தமையால் வள்ளி என்னும பெயருண்டாயிற்று. வள்ளியம்மையாரை விரும்பி வலிதிற்சென்று அனேக லீலைகளைச் செய்து மணந்தமையாலும், இளைய மனைவியாத லாலும் 'நேசக்குறமகள்' என்றார்.

3. 'குறமகள் நினைவோன்' இது இரண்டாம் வேற்றுமைத் தொகை; இனி 'குறமகளால் நினைக்கப்பெறுவோன்' எனப் பொருள் கூறுவாரும் உண்டு.

எ ஆறுமுகம் படைத்த ஐயா! வருக!
நீறிடும் வேலவன் நித்தம் வருக!

[பதவுரை]

| | |
|---|---|
| ஆறுமுகம் படைத்த | = ஆறு திருமுகங்களைப் பெற்றுள்ள |
| ஐயா | = ஐயனே! |
| வருக | = வந்தருளுக! |
| நீறு | = திருநீற்றை |

இடும் = திருமேனியில் அணிகின்ற
வேலவன் = வேலாயுதத்தையுடைய முருகப் பிரான்
நித்தம் = தினமும்
வருக = வந்தருளுக!

[விருத்தியுரை]

1. இறைவர் திருமுகங்களாகிய ஈசாநம், தற்புருடம், வாமதம், அகோரம், சத்யோஜாதம், அதோமுகம் என்னும் ஆறுமுகத்தினின்றும் ஆறு தீப்பொறிகளாக அவதரித்தமையால் முருகப்பிரானுக்கு ஆறு திருமுகங்க ளமைந்தன.

2. முருகர் சிவபெருமான் திருப்புதல்வராதலாலும், சிவபெருமானும் முருகவேளும் அபேதமாதலாலும், சிவபெருமானுக்குரிய நீறு முருகருக்கும் உண்டென்பதறிக.

3. சர்வசம்மாரகாலத்து எல்லாம் சாம்பராகி இறைவனை அடைகின்றது. ஆதலின், இறைவன் நீறணிமேனியன் ஆனார்.

இனி 'நீறிடு வேலவன்' என்பதற்கு, 'சூரன் பதுமன் முதலிய அசுரர்களை நீறாக்கிய வேலாயுதத்தையுடைய முருகனே' எனப் பொருள் கூறுவாரும் உண்டு.

4. சேயைத் தந்தை காப்பது கடன்மை ஆதலின் சேயாகிய என்னைத் தந்தையாகிய நீ காக்க வந்தருளுக என்னும் பொருள் தொனிக்க 'ஆறுமுகம் படைத்த ஐயா!' என்றார்.

அ சிரகிரி வேலவன் சீக்கிரம் வருக!
சரஹண பவனார் சடுதியில் வருக!

[பதவுரை]

சிரகிரி = சிராமலையில் வசிக்கின்ற
வேலவன் = வேலாயுதத்தையுடைய முருகக்கடவுள்

சீக்கிரம் = சீக்கிரமாக
வருக = வந்தருளுக!
சரறெணபவனுர் = சரவணப்பொய்கையில் வளர்ந்த ஆறு முகக் கடவுள்
சடுதியில் = சீக்கிரமாக
வருக = வந்தருளுக!

[விருத்தியுரை]

1. சிரகிரி - இது ஒருமலை; இனிச் 'சிகரத்தை யுடைய மலை' என்பாரும் உண்டு.

2. ஆதரம் மிகுதி தோன்ற 'சீக்கிரம்' என்றார்.

3. சடுதியில் - இது நூலுக்குச் சொல்; திசைச்சொல்.

கூ ரஹண பவச ரரரர ரரர
ரிஹண பவச ரிரிரிரி ரிரிரி

க௦ விணபவ சரஹ வீரா! நமோநம!
நிபவ சரஹண நிறநிற நிறென

கக வசர ஹணப! வருக! வருக!
அசுரர் குடிகெடுத்த ஐயா! வருக!

[பதவுரை]

'ரஹண' என்றதிலிருந்து 'விணபவ சரஹ' என்றதுவரை; இது சடாட்சர மந்திரம் எழுத்து மாறி நின்றது. இது திருமந்திரம்; இதனை உபதேச முறையாகக் குருவினிடம் கேட்கற்பாலது.

ரவண பவச ரரரர ரரர
ரிஹண பவச ரிரிரிரி ரிரிரி
விணபவ சரஹ

என்று பலவகையாக மாறிவரப்பட்ட சடாட்சரமுதலிய பல அட்சரங்களின் மூலப்பொருளும் வடிவும் ஆகிய

| | |
|---|---|
| வீரா! | = வீரனே ! |
| நமோ நம | = உனக்கு நமஸ்காரம்! நமஸ்காரம்! |
| நிபவசரஹண | = நிபவசரஹண என்னும் அட்சரங்களின் சொரூபம் ஆனவனே ! |
| வசரஹணப | = வசரஹணப என்னும் அட்சரங்களின் வடிவம் ஆனவனே! |
| நிறநிறநிறெண | = நிறநிறநிறெண ஓசை உண்டாகும்படி |
| வருக வருக | = வந்தருளுக! வந்தருளுக! |
| அசுரர் | = தேவர்களுக்கு இடுக்கண் செய்த சூரன் பதுமன் முதலிய அசுரர்களின் |
| குடி | = குடும்பங்களை |
| கெடுத்த | = அழித்த |
| ஐயா | = ஐயா ! |
| வருக | = வந்தருள்வாயாக. |

[விருத்தியுரை]

1. இந்த ஆறு அடிகளிலும் மந்திரங்களே அமைக்கப்பெற்றிருக்கின்றன. இவை குருமுகமாகக் கிரமப்படிக் கேட்கத்தக்கன.

2. நிறநிறநிறெண - ஒலிக்குறிப்பு.

3. தேவர்களுக்குப் பகைவர்களாகிய போராற்றலுடைய அசுரர்களை அழித்தவன் எம் முருகப்பிரான் ஆதலின் 'வீரா' என்றார்.

கஉ என்னை யாளு மிளையோன் கையில்
பன்னிரண் டாயுதம் பாசாங் குசமும்

கரு பரந்த விழிகள் பன்னிரண் டிலங்க
விரைந்தெனைக் காக்க வேலோன் வருக!

[பதவுரை]

| | |
|---|---|
| என்னை | = அடிமையாகிய என்னை |
| ஆளும் | = ரட்சித்தருளும் |
| இளையோன் | = சிவபெருமானின் இளைய புத்திரரும் |
| வேலோன் | = வேலாயுதத்தை உடையவருமாகிய முருகக்கடவுள் |
| கையில் | = தம்முடைய பன்னிரண்டு திருக்கரங்களிலும் |
| பன்னிரண்டு ஆயுதம் | = பன்னிரண்டாகிய ஆயுதங்களும், |
| பாசாங்குசமும் | = பாசமும் அங்குசமும், |
| பரந்த | = விரிந்த |
| பன்னிரண்டு விழிகள் | = பன்னிரண்டு திருக்கண்களும் |
| இலங்க | = விளங்க |
| என்னைக் காக்க | = அடியேனாகிய என்னைக் காத்தருளும் பொருட்டு |
| விரைந்து | = வேகமாக |
| வருக | = வந்து சேருக! |

[விருத்தியுரை]

1. முருகக்கடவுள் என்றும் இளமைத் திருக்கோலம் உடையவர் ஆதலின் 'இளையோன்' என்றார். இதனாலன்றோ நக்கீரரும்

"என்றும் இளையாய் அழகியாய்"

என்று கூறினார். 'சிவபெருமானுக்கு முருகப்பிரான் இளையபுத்திரர் ஆதலின் 'இளையோன்' என்றார்' என்பாரும் உண்டு.

2. பாசாங்குசம்: பாசமும் அங்குசமும் என விரிதலின் இது உம்மைத்தொகை; இது வடமொழிச் சந்தி.

3. பரந்த விழிகள் - அருள்பரந்த விழிகள் என்னலும் ஆம்.

கச ஐயுங் கிலியும் அடைவுடன் சௌவும்
உய்யொளி சௌவு முயிரையுங் கிலியும்

கரு கிலியுஞ் சௌவும் கிளரொளி யையும்
நிலைபெற் றென்முன் நித்தமு மொளிரும்

கசு சண்முகன் றீயுந் தனியொளி யொவ்வும்
குண்டலி யாஞ்சிவ குகனறினம் வருக !

[பதவுரை]

| | |
|---|---|
| *ஐயுங் கிலியும்* | = *ஐயுங் கிலியும்,* |
| *அடைவுடன்* | = *முறைமையாக* |
| *சௌவும்* | = *சௌவும்,* |
| *உய்* | = *பிழைத்தற்கேதுவான* |
| *ஒளி* | = *பிரகாசத்தோடு கூடிய* |
| *சௌவும்* | = *சௌவும்,* |
| *உயிர்* | = *பிராணனாகிய* |
| *ஐயுங் கிலியும் கிலியுஞ் சௌவும்* | = *ஐயுங் கிலியும் கிலியுஞ் சௌவும்,* |
| *கிளர்* | = *பிரகாசிக்கின்ற* |
| *ஒளி* | = *ஒளிமயமாகிய* |
| *ஐயும்* | = *ஐயும்* |
| *நிலைபெற்று* | = *நிலைத்து* |
| *என் முன்* | = *அடியேனாகிய எனக்கு முன்* |
| *நித்தமும்* | = *தினந்தோறும்* |
| *ஒளிரும்* | = *பிரகாசிக்கின்ற* |
| *சண்முகன்* | = *ஆறுமுகன் என்னும் பெயர்க்குரிய வடிவத்தை உடையவராயும்,* |
| *றீயும்* | = *றீயும்,* |
| *ஒளி* | = *பிரகாசமுள்ள* |

| | |
|---|---|
| ஒவ்வும் | = ஒவ்வும், |
| குண்டலி | = மூலாதாரமும் |
| ஆம் | = ஆகிய |
| சிவகுகன் | = சிவபுத்திரராகிய குகப்பெருமான் |
| தினம் | = நாடோறும் |
| வருக | = வந்தருளுக ! |

[விருத்தியுரை]

1. இவ்வடிகளில் மந்திரங்களே அமைந்திருக்கின்றன. அவைகளைக் குருமுகமாகக் கேட்கவேண்டும். அவைகள் எழுத ஒண்ணாது.

2. மலைக் குகைகளில் எழுந்தருளியிருப்பவர் ஆதலின் 'குகன்' என்னும் திருநாமம் முருகக்கடவுளுக்கு வந்தது. அடியவர்களின் மனமாகிய குகையில் எழுந்தருளியிருப்பவர் ஆதலின் 'குகன்' என்னும் நாமம் உண்டாயிற்று எனலும் ஆம்.

கஎ ஆறு முகமு மணிமுடி யாறும்
நீறிடு நெற்றியும் நீண்ட புருவமும்

கஅ பன்னிரு கண்ணும் பவளச்செவ் வாயும்
நன்னெறி நெற்றியில் நவமணிச் சுட்டியும்

[பதவுரை]

| | |
|---|---|
| ஆறுமுகமும் | = ஆறு திருமுகங்களும், |
| அணி | = அழகு பொருந்திய |
| முடி ஆறும் | = கிரீடங்கள் ஆறும், |
| நீறு இடும் | = திருநீறணியப்பெற்றுள்ள |
| நெற்றியும் | = ஆறு திருநெற்றிகளும், |
| நீண்ட | = நீளமாகிய |
| புருவமும் | = பன்னிரு புருவங்களும், |
| பன்னிருகண்ணும் | = பன்னிரண்டு திருக்கண்களும், |

| | |
|---|---|
| பவளச் செவ்வாயும் | = பவளம்போன்ற நிறத்தையுடைய சிவந்த ஆறு திருவாய்களும், |
| நல் நெறி | = நல்ல ஒழுங்கையுடைய |
| நெற்றியில் | = ஆறு திருநெற்றிகளிலும் |
| நவமணிச் சுட்டியும் | = ஒன்பது வகை இரத்தினங்களுங் குயிற்றிச் செய்துள்ள சுட்டி என்னும் ஆபரணமும். |

[விருத்தியுரை]

1. இதில் உள்ள உம்மைகள் எண்ணும்மைகள்.

2. ஆறு தலைக்கும் முடி யணிந்திருத்தலினால் 'மணிமுடி ஆறும்' என்றார். மணி முடி - 'இரத்தினங்கள் பதித்துச் செய்த முடி' 'அழகிய முடி' எனலும் ஆம்.

3. 'நீறு' என்றது திருநீற்றை.

4. புருவம் நீண்டிருத்தலும் இதழ்கள் செவந்திருத்தலும் உத்தம இலக்கணங்கள். எம்பெருமானாகிய முருகக்கடவுளுக்குப் புருவங்கள் நீண்டும் வாயிதழ்கள் பவளம்போன்று செவந்தும் இருத்தலினால் 'நீண்ட புருவமும்' என்றும், 'பவளச் செவ்வாயும்' என்றுங் கூறினார்.

5. நன்னெறி நெற்றி - 'உத்தம இலக்கணங்களோடு கூடிய நெற்றி' என்றலும் ஒன்று.

6. சுட்டி - நெற்றியில் அணியும் ஆபரணம்.

கக ஈராறு செவியில் இலகுகுண் டலமும்
ஆறிரு திண்புயத் தழகிய மார்பில்
உ0 பல்பூ ஷணமும் பதக்கமுந் தரித்து
நன்மணி பூண்ட நவரத்ன மாலையும்.

[பதவுரை]

| | |
|---|---|
| ஈராறு செவியில் | = பன்னிரண்டு செவிகளிலும் |
| இலகு | = விளங்குகின்ற |
| குண்டலமும் | = குண்டலம் என்னுங் காதணியும், |
| திண் | = வலிய |
| ஆறு இருபுயத்து | = பன்னிரண்டு தோள்களிலும் |
| அழகிய மார்பில் | = அழகுபொருந்திய மார்பினிடத்தும் |
| பல் பூஷணமும் | = பலவகையான ஆபரணங்களும் |
| பதக்கமும் | = மார்புப்பதக்கமும் |
| நல் மணி பூண்ட | = நல்ல அழகைக் கொண்ட |
| நவரத்ன மாலையும் | = ஒன்பது வகையான மணிகளாற் செய்த மாலையும் |
| தரித்து | = அணிந்து. |

[விருத்தியுரை]

1. குண்டலம் - காதணி.

2. பூஷணம் - வடசொல்; 'ஆபரணம்' என்பது பொருள்.

3. அழிவில்லா வரம் பெற்ற அசுரரை அழித்த புயங்கள் ஆதலின் 'திண்புயம்' என்றார்.

4. தரித்து - வினையெச்சம; பின் வரும் மூந்து என்னும் ஏவல் வினைமுற்றைக் கொண்டு பொருள் முடிகிறது.

உக முப்புரி நூலும் முத்தணி மார்பும்
செப்பழ குடைய திருவயி றுந்தியும்

உஉ துவண்ட மருங்கில் சுடரொளிப் பட்டும்
நவரத்னம் பதித்த நற்சீ ராவும்

உங இருதொடை யழகும் இணைமுழந் தாளும்
திருவடி யதனில் சிலம்பொலி முழங்க.

[பதவுரை]

| | | |
|---|---|---|
| முப்புரி நூலும் | = | மூன்று புரிகளைக் கொண்ட பூணூலையும் |
| முத்து அணி | = | முத்து மாலையையும் அணிந்த |
| மார்பும் | = | திருமார்பும், |
| செப்பு | = | புகழும் |
| அழகுடைய | = | வனப்புள்ள |
| திரு | = | மேன்மையான |
| வயிறு | = | வயிறும், |
| உந்தியும் | = | கொப்பூழும், |
| துவண்ட | = | அசைந்த |
| மருங்கில் | = | இடுப்பிலே |
| சுடர் | = | பிரகாசிக்கின்ற |
| ஒளி | = | ஒளியையுடைய |
| பட்டும் | = | பட்டாடையும், |
| நவரத்னம் பதித்த | = | ஒன்பதுவகை மணிகள் பதித்த |
| நல் சீராவும் | = | நல்ல கவசமும், |
| இருதொடை அழகும் | = | இரண்டு தொடைகளின் அழகும், |
| இணை | = | இரண்டாகிய |
| முழந்தாளும் | = | முழங்கால்களும், |
| ஒலி முழங்க | = | ஓசை சப்திக்க |
| திருவடியதனில் | = | அழகிய பாதங்களில் |
| சிலம்பு | = | கிண்கிணியும் |
| தரித்து | = | பூண்டு. |

[விருத்தியுரை]

1. 'பல்பூஷணமும் பதக்கமுந்தரித்து' என்ற அடியில் உள்ள 'தரித்து' என்ற வினையெச்சம் பின்னுங் கூட்டிப் பொருள் செய்யப்பெற்றது.

2. 'முத்தணி மார்பும்' என்றதில் முத்து என்றது முத்துக்களாலாகிய மாலையைக் குறித்தது.

3. செப்பழகு - 'சிறப்பித்துப் புகழ்ந்து கூறும் அழகு' என்பதாம். 'செப்பு' திசைச் சொல்.

4. சுடரொளிப் பட்டு - ஜோதிப் பிரகாசமாகப் பிரகாசிக்கும் பட்டு.

5. சீரா - வீரர் அணியும் போர்க்கவசம்.

6. சிலம்பு-இது காலில் அணியும் ஓர் அணி; சப்திக்கும் தன்மை யுடையது ஆதலின் 'சிலம்பு' எனப் பேர் வந்தது. இது காரணப் பெயர்.

உச சேகசண! சேககண! சேகசண! சேகண!
மோகமோக மோகமோக மோகமோக மோகேன

உரு நகநக நகநக நகநக நகேன
டிகுகுண டிகுடிகு டிகுகுண டிகுண

உசு ரரரர ரரரர ரரரர ரரர
ரிரிரிரி ரிரிரிரி ரிரிரிரி ரிரிரி

உஎ டுடுடுடு டுடுடுடு டுடுடுடு டுடுடு
டகுடகு டிகுடிகு டங்கு டிங்குகு

உஅ விந்து! விந்து! மயிலோன் விந்து!
முந்து! முந்து! முருகவேண் முந்து!

[பதவுரை]

செககண செககண செககண செகண = பூமியிற் சேர்ந்திருப்பவனே! பூமியிற் சேர்ந்திருப்பவனே! பூமியிற் சேர்ந்திருப்பவனே! பூமியிற் சேர்ந்திருப்பவனே!

மொகமொக மொகமொக மொகமொக மொகென—,
நகநக நகநக நகநக நகெண—,

*டிகுகுண டிகுகுண டிகுகுண டிகுண*
*ரரரர ரரரர ரரரர ரரர—,*
*ரிரிரிரி ரிரிரிரி ரிரிரிரி ரிரிரி—,*
*டுடுடுடு டுடுடுடு டுடுடுடு டுடுடு—,*
*டகுடகு டகுடகு டிகுடிகு டிங்குகு*

*விந்து விந்து* = *தாதுவே! தாதுவே!*
*மயிலோன்* = *மயில் வாகனத்தைக் கொண்டுள்ள*
*விந்து* = *தாதுவே!*
*முருகவேள்* = *முருகவேளாகிய கடவுளே!*
*மூந்து மூந்து மூந்து* = *(அடியேனைக் காத்தருளும்பொருட்டு) முற்பட்டு வருவாயாக! முற்பட்டு வருவாயாக! முற்பட்டு வருவாயாக!*

[விருத்தியுரை]

1. 'செககண' என்றதற்குப் 'பூமியின் சேர்க்கை யுடையவனே' எனப் பொருள் கொண்டாம்; இவ்வாறன்றி இதுவும் மந்திரவெழுத்து எனக் கொள்வாரும் உண்டு.

2. 'மொகமொக' 'நகநக' முதலியவைகள் ஒலிக்குறிப்புப் போலும்; மந்திர எழுத்துக்களாக இருப்பினும் இருக்கலாம்; அவைகளைக் குரு முன்னிலையிற் கேட்டுணரவேண்டும்.

3. 'விந்து' என்றது தாதுவை; முருகன் எல்லாப் பொருள்களுக்கும் ஆதிகாரணன் ஆதலின் 'விந்து' என்றார்.

4. 'மூந்து' என்றது மும்முறை அடுக்கிற்று; இது விரைவுப்பொருளில் அடுக்கியது.

5. முருகவேள் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

உக என்றனை யாளு மேரகச் செல்வ!
மைந்தன் வேண்டும் வரமகிழ்ந் துதவும்.

[பதவுரை]

| | |
|---|---|
| என்கனே | = அடியேனாகிய என்னை |
| ஆளும | = ஆண்டு அருளும் |
| ஏரகச் செல்வ! | = ஏருவேரகம் என்னும் திருத்தலத்தில் வசிக்கும் செல்வனே! |
| மைந்தன் | = உன் புத்திரனாகிய அடியேன் |
| வேண்டும | = விரும்பிக் கேட்கின்ற |
| வரம் | = வரங்களை |
| மகிழ்ந்து | = சந்தோஷங்கொண்டு |
| உதவும | = கொடுக்கின்ற. |

[விருத்தியுரை]

1. ஏரகம் - இது கும்பகோணத்திற்கு மேற்கே மூன்றாவது மயிலில் உள்ளது, இதனைச் 'சுவாமிமலை' என்றுங் கூறுவர்.

2. அடியார் வேண்டுவன எல்லாந் தரும் செல்வம் உடையவன் முருகப்பிரான் ஆதலின் 'செல்வ' என்றார்.

3. தந்தைக்குப் பின் மகன் குடியைக் காக்கும் வலிமை யுடையவன் ஆதலின் மகனுக்கு 'மைந்தன்' என்னும் பெயர் ஆயிற்று; இது காரணப்பெயர். மைந்து-வலிமை.

4. தன் பிள்ளை வேண்டுவதைத் தந்தை கொடுப்பது தந்தைக்கு மகிழ்ச்சி தருவது ஒன்றாதலின் 'மகிழ்ந்து உதவும்' என்றார்.

௩0 லாலா லாலா லாலா வேசமும்
லீலா லீலா லீலா விநோதனென்

௩௧ றுன்றிரு வடியை உறுதியென் றெண்ணும்
என்றலை வைத்துன் இணையடி காக்க!

[பதவுரை]

| | |
|---|---|
| லாலா லாலா லாலா | — அடியார்கள் துதிக்கத்தக்க லாலா லாலா லாலா என்னும் துதி ஒலிகளின் |
| வேசமும் | = ஆவேசமும், |
| லீலா லீலா லீலா | = பல்வகைத் திருவிளையாடல்களும் பொருந்திய |
| விநோதன் | = விநோதத்தை உடையவனே! |
| என்று | = என்று கூறித் துதித்து |
| உன் | = தேவரீருடைய |
| திருவடியை | = அழகிய பாதங்களை |
| உறுதி என்று | = (அடியேனுக்குத்) துணை செய்வது உறுதி யென்று |
| எண்ணும் | = நினைக்கின்ற |
| என் தலை | = அடியேனுடைய சிரத்தில் |
| உன் இணை அடி | = தேவரீருடைய உபயபாதங்களையும |
| வைத்து | = வைத்தருளி |
| காக்க | = காத்தருள் செய்வாயாக! |

[விருத்தியுரை]

1. 'லாலா' என்னும் ஒலி தேவாவேசத்தை உண்டாக்குதற் பொருட்டுச் செய்யும் ஒலி; இதனையும் மந்திர எழுத்தென்பாரும் உண்டு.

2. 'லீலா' என்பது மிகுதிப்பொருளில் அடுக்கியது; லீலை-விளையாட்டு.

3. விநோதத்தை உடையவன் விநோதன்; விநோதம்-வேடிக்கை.

4. திருவடி தலையில் வைத்தலைத் 'திருவடி தீட்சை' என்பர். "என்றலை வைத்து இணையடி காக்க' என்றதில் 'தலை, அடி' என்ற சொற்கள் அமைந்ததால் முரண்டொடையாயிற்று.

"முரணத் தொடுப்பது முரண்டொடை யாகும்."

என்பது சூத்திரம்.

5. இணையடி - உபயபாதம்.

6. காக்க - வியங்கோள்.

கூஉ என்னுயிர்க் குயிரா மிறைவன்! காக்க!
பன்னிரு விழியால் பாலனைக் காக்க!

[பதவுரை]

| | |
|---|---|
| என் உயிர்க்கு | = அடியேனுடைய உயிர்க்கும் |
| உயிராம் | = உயிராயிருக்கின்ற |
| இறைவன் | = முருகக்கடவுளே! |
| காக்க | = அடியேனாகிய என்னைக் காத்தருள் செய்க! |
| பன்னிரு விழியால் | = பன்னிரண்டு திருக்கண்களாலும் |
| பாலனை | = தேவரீரின் குழந்தையாகிய அடியேனை |
| காக்க | = காத்தருள் செய்வீராக! |

[விருத்தியுரை]

1. இறைவன் ஊனாகி உயிராகி உயிர்க்குயிரா யிருப்பவன் ஆதலின் 'என் உயிர்க்குயிராம் இறைவன்' என்றார்.

2. பன்னிரு விழி - பன்னிரண்டு விழிகள்; இனி, இதற்கு 'யாவருந் துதிக்கத்தகுந்த கருணையாற் பெரிதாகிய விழிகள் பன்னிரண்டாலும் எனவும் பொருள் கூறுவர்.

3. பிள்ளையைத் தந்தை காப்பது கடன்மையாதலால் 'பாலனைக் காக்க' என்றார். வயது முதிர்ந்த பிள்ளையைத் தந்தை காக்கக்

கடன்மை இல்லை; வயது வந்த பிள்ளையே வயதேறிய தந்தையைக் காக்கவேண்டும் என்பர்; ஆதலின், தன்னைத்தான் காக்கும் ஆற்றல் இல்லாமையை உணர்த்தப் 'பாலன்' என்றார்.

4. விழியால் காத்தலாவது, கடாட்சித்தருளுதல்; கருணை நோக்கஞ் செய்தல்.

5. இறைவன் - அண்மை விளி.

௩௩ அடியேன் வதனம் அழகுவேல் காக்க!
பொடிபுனை நெற்றியைப் புனிதவேல் காக்க!

[பதவுரை]

| | |
|---|---|
| அடியேன் | = அடியவனாகிய என்னுடைய |
| வதனம் | = முகத்தை |
| அழகு வேல் | = தேவரீருடைய அழகிய வேலாயுதமானது |
| காக்க | = காக்கக்கடவது! |
| பொடி புனை | = விபூதியை அணிகின்ற |
| நெற்றியை | = நெற்றியை |
| புனிதம் | = பரிசுத்தமுள்ள |
| வேல் | = அவ் வேலாயுதமே |
| காக்க | = காத்தருள்செய்வதாக! |

[விருத்தியுரை]

1. எல்லாப் படையினும் வேல் சிறந்ததாதலினாலும், சூரன் முதலிய அசுரரையும் கிரௌஞ்ச மலையையும் அழித்தது வேலாதலினாலும், 'அழகுவேல் காக்க' என்றார். இதனாலன்றோ பெரியாரும்,

"சேவலும் மயிலும் போற்றி
சேங்கைவேல் போற்றி போற்றி"

என்று துதித்தார்.

2. 'பொடி' என்றது விபூதியை; பொடி: தூளாக உள்ள எதனையுங் குறிக்கும் ஆயினும் 'பொடிபுனை நெற்றி' என்றதனால் விபூதி என்பது பெற்றாம். "நெற்றிக்கழகு நீறே." இதனாலன்றோ ஔவைப் பிராட்டியும்,

"நீறிலா நெற்றிபாழ்"

என்றருளினள்.

"பொடி யணியும் பெம்மான்"

எனத் தேவாரத்துப் பல இடத்தும் வந்தமையுங் காண்க.

3. துட்டரை யழித்துச் சிட்டரைக் காக்கும் வேலாதலினாலும், தன்னால் அழிவுற்றார்க்குத் திருப்பதந் தரும் இயல்பு உடையது ஆதலினாலும் 'புனிதவேல்' என்றார்.

௩௪ கதிர்வே லிரண்டு கண்ணினைக் காக்க!
விதிசெவி யிரண்டும் வேலவர்! காக்க!

[பதவுரை]

| | |
|---|---|
| கதிர் | = ஒளியைச் செய்கின்ற |
| வேல் | = வேலாயுதமானது |
| இரண்டு கண்ணினை | = அடியேனுடைய இரண்டு கண்களை |
| காக்க | = காக்கக்கடவது! |
| விதி | = பிரமனால் படைக்கப்பட்ட |
| செவி இரண்டும் | = இரண்டு செவிகளையும் |
| வேலவர் | = வேலாயுதத்தைத் தரித்தவரே! |
| காக்க | = காத்தருளுக! |

[விருத்தியுரை]

1. பொருள்களை அறிதற்குக் கண் மிக முக்கியமானது ஆதலின் 'கண்ணினைக் காக்க' என்றனர். ஒரு கண் காக்கப்பெற்று ஒரு கண் ஊனம் பெறின் அப்பொழுதும் குருடன் எனும் பெயர் ஆம் ஆதலின் 'இரண்டு கண்ணினைக் காக்க' என்றனர்.

"கண்ணிற் சிறந்த உறுப்பில்லை."

"விழியிலா முகம்போன்ற மதியிலா வானம்"

என்ற பெரியோர்களின் வாக்கால் கண்ணின் அருமை காணலாம்.

௩௫ நாசிக ளிரண்டும் நல்வேல் காக்க!
பேசிய வாய்தனைப் பெருவேல் காக்க!

[பதவுரை]

| | |
|---|---|
| நாசிகள் இரண்டும் | = இரண்டு மூக்குத் துளைகளையும் |
| நல் வேல் | = நன்மையைச் செய்யும் வேலானது |
| காக்க | = காக்கக்கடவது! |
| பேசிய | = (தேவரீரது புகழைப்) பேசிய |
| வாய்தனை | = வாயை |
| பெரு வேல் | = பெருமை பொருந்திய வேலானது |
| காக்க | = காக்கக்கடவது! |

[விருத்தியுரை]

1. நன்மை, பெருமை என்பன முறையே 'நல், பெரு' என நின்றன. இது விகாரம்.

[நன்னூல்-௧௩௬-ம் சூத்திரம்]

"ஈறு போதல் இடையுகர மிய்யாதல்
ஆதி நீடல் அடியகர மையாதல்
தன்னொற் றிரட்டல் முன்னின்ற மெய்திரிதல்
இனமிக லினையவும் பண்பிற் கியல்பே."

என்னும் விதியின்படி அவ்விரண்டு பண்புப்பெயர்களும் விகாரப் பட்டன.

2. 'இரண்டும்' இதில் உள்ள உம்மை முற்றும்மை.

௬௯ முப்பத் திருபல் முனைவேல் காக்க!
செப்பிய நாவைச் செவ்வேல் காக்க!

[பதவுரை]

முப்பத்திருபல் = அடியேனின் முப்பத்திரண்டு தந்தங்களையும்
முனை = கூர்மை பொருந்திய
வேல் = வேலானது
காக்க = காத்தருள்வதாக!
செப்பிய = தேவரீரது தோத்திரங்களைச் சொல்லிய
நாவை = நாக்கை
செவ்வேல் = செவ்வியதாகிய வேலாயுதமானது
காக்க = காத்தருள்வதாக!

[விருத்தியுரை]

1. மக்களுக்குப் பாலப் பருவத்தே முப்பது பல் முளைத்திடும்; வாலிபப் பருவத்து இரண்டு பல் முளைக்கும்; ஆக முப்பத்திரண்டு பற்கள் உள. வாலிபப் பருவத்தே முளைக்கும் பல்லை 'ஞானப்பல்' என்பர் ஒரு சாரார்.

"எண்ணான்கு முப்பத் திரண்டுபற் காட்டி இசையடனே"
என்ற புலவர் வாக்கானும் அறிக.

2. 'செப்பு' திசைச்சொல்; தெலுங்குநாட்டுச் சொல்; செப்பிய - இறந்தகாலப் பெயரெச்சம்.

3. முனைவேல் - 'கூரிய நுதியையுடைய வேல்' என்பது பொருள்; இனி, இதற்குப் 'போர் செய்யும் வேல்' என்பாரும் உண்டு. முனை-போர்.

4. செவ்வேல் - 'செவ்விதாகிய வேல், செம்மையாகிய வேல்' என்பது பொருளாம்; 'நெருப்பிற் காய்ச்சி வடித்துத் தட்டித் தீட்டிய வேல்' என்பது பொருளாம். இனி, முருகப்பிரான் திருக்கரத்து வேல் உமாதேவியாரால் அருளப்பெற்ற வேல் ஆதலின் தெய்வீகத்தால் உண்டாகிய வேல்; நெருப்பில் வேகவும் கொட்டவுந் தட்டவும் வேண்டப்பெறுதாதலின் 'செவ்வேல்' என்பதற்கு 'அசுரர்களின் இரத்தம் தோய்ந்து செவந்த வேல்' எனப் பொருள் கூறலும் ஆம்.

௩௭ கன்ன மிரண்டும் கதிர்வேல் காக்க!
என்னிளங் கழுத்தை இனியவேல் காக்க!

[பதவுரை]

| | |
|---|---|
| கன்னம் இரண்டும் | = இரண்டு கன்னங்களையும் |
| கதிர் | = பிரகாசிக்கின்ற |
| வேல் | = வேலாயுதமானது |
| காக்க | = காக்கக்கடவதாக! |
| என் | = அடியேனுடைய |
| இளங்கழுத்தை | = இளமையாகிய கழுத்தை |
| இனிய | = இன்பந் தருவதாகிய |
| வேல் | = வேலாயுதமானது |
| காக்க | = காத்தருள்வதாக! |

[விருத்தியுரை]

1. கதிர் வேல்-'கதிரைச் செய்கின்றவேல்,' அதாவது, 'பிரகாசிக்கின்ற வேல்' என்பது பொருள். 'கிரணத்தைச் செய்கின்ற வேல்' என்றுர் பிறரும்.

2. கழுத்தானது நட்பமான தசைகளாலும், தசை நார்களாலும், நரம்புகளாலும் அமைக்கப்பெற்றுள்ளதாதலின் 'இளைய கழுத்து' என்றார்.

3. முருகர்வேல் துட்டரை அடக்கி உலகங்களுக்கெல்லாம் இன்பஞ்செய்யுந் தன்மை உடையது ஆதலின் 'இனிய வேல்' என்றார்.

௲௨ மார்பை யிரத்ந வடிவேல் காக்க !
சேரிள முலைமார் திருவேல் காக்க !

[பதவுரை]

| | |
|---|---|
| மார்பை | = மார்பை |
| இரத்நம் | = இரத்நங்கள் பதிக்கப்பெற்றதும் |
| வடி | = வடித்தெடுக்கப்பெற்றதும் ஆகிய |
| வேல் | = வேலானது |
| காக்க | = காத்தருள்வதாக! |
| சேர் | = மார்பொடு சேர்ந்துள்ள |
| இளமுலைமார் | = இளமையாகிய முலை பொருந்தியுள்ள இருபுறத்து மார்பையும் |
| திரு | = அழகிய |
| வேல் | = வேலாயுதமானது |
| காக்க | = காத்தருள் செய்வதாக! |

[விருத்தியுரை]

1. 'இரத்ந வடிவேல்' என்றது ரத்தினங்கள் பதித்துச் சித்திரிக்கப் பெற்றதனால்.

2. 'திருவேல்' 'அழகிய வேல்,' 'மேன்மை பொருந்திய வேல்' என்பது பொருளாம். உமாதேவியாரால் தரத்தருளப் பெற்றதனாலும், அசுரரைக்கொன்று தேவரைக் காத்தமையாலும் 'திருவேல்' என்றார்.

௩௯. வடிவே லிருதோள் வளம்பெறக் காக்க!
பிடரிக ளிரண்டும் பெருவேல் காக்க!

[பதவுரை]

| | |
|---|---|
| வடி | = வடித்தாக் கூர்மையாக்கிய |
| வேல் | = வேலானது |
| இரு தோள் | = இரண்டு தோள்களையும் |
| வளம் பெற | = வளப்பம் அடையும்படி |
| காக்க | = காத்தருள் செய்வதாக! |
| பிடரிகள் இரண்டும் | = இரண்டு பிடரிகளையும் |
| பெரு வேல் | = பெருமைதங்கிய வேலாயுதமானது |
| காக்க | = காத்தருள் செய்வதாக! |

[விருத்தியுரை]

1. வடிவேல்-வடித்தெடுக்கப்பட்ட வேல்; உலையிற் காய்ச்சித் தட்டித் தீட்டிய வேல்.

2. தோள் ஆடவர்க்குச் சிறந்த உறுப்பு; வினைசெயற்குத் தோள் இன்றியமையாக் கருவி ஆதலால் 'வடிவே லிருதோள் வளம் பெறக் காக்க' என்றனர். தோள் சிறந்ததென்பதைக்கொண்டன்றோ

"நீடிய வரக்கர் சேனை நீறுபட் டொழிய வாகை
சூடிய சிலையி ராமன் றோள்வலி கூறு வோர்க்கே."

என்றனர் கம்பரும்.

௪௦ அழகுடன் முதுகை அருள்வேல் காக்க!
பழுபதி னாறும் பருவேல் காக்க!

[பதவுரை]

| | |
|---|---|
| முதுகை | = முதுகை |
| அழகுடன் | = அழகாக |

| | |
|---|---|
| அருள் | = கருணை பொருந்திய |
| வேல் | = வேற்படையானது |
| காக்க | = காத்தருள் செய்வதாக ! |
| பழு | = விலா எலும்புகள் |
| பதினாறும் | = பதினாறினையும் |
| பரு | = பெரிதாகிய |
| வேல் | = வேற்படையானது |
| காக்க | = காத்தருள் செய்வதாக. |

[விருத்தியுரை]

1. பழுவெலும்பு - 'பருத்த எலும்பு' என்பாரும்உண்டு.

"பழுவேன்பு தேயப் பாடுசெய் திடினும்"

என்றார் பிறரும்; இதற்குப் 'பருத்த விலா எலும்பு' எனலும் ஆம்.

சக வெற்றிவேல் வயிற்றை விளங்கவே காக்க!
சிற்றிடை யழகுறச் செவ்வேல் காக்க!

[பதவுரை]

| | |
|---|---|
| வெற்றி | = வெற்றியையுடைய |
| வேல் | = வேற்படையானது |
| வயிற்றை | = வயிற்றினை |
| விளங்க | = விளக்க முறும்படி |
| காக்க | = காத்தருள் செய்வதாக ! |
| சிறு இடை | = சிறியதாய இடுப்பை |
| அழகு உற | = அழகு சேர |
| செவ்வேல் | = செவ்விய வேலாயுதமானது |
| காக்க | = காத்தருள் செய்வதாக! |

[விருத்தியுரை]

1. *வெற்றி - ஜெயம்; இதற்கு வெல்-பகுதி; வென்றதன்மேலாகிய புகழ் வெற்றி.*

2. *உயிருக்காதாரம் உணவு. உணவு தொழில் பெறுமிடம் வயிறு ஆதலின் 'வயிற்றை விளங்கவே காக்க' என்றார்.*

3. *சிறுமை + இடை = சிற்றிடை என்றாயிற்று. 'சிறுமை' பண்பிற் பகாநிலைப்பதம்; 'நுண்ணிய இடை' என்பதாம்.*

சஉ நாணாங் கயிற்றை நல்வேல் காக்க!
ஆண்குறி யிரண்டும் அயில்வேல் காக்க!

[பதவுரை]

| | |
|---|---|
| *நாண் ஆம்* | = *நரம்பாகிய* |
| *கயிற்றை* | = *கயிற்றினை* |
| *நல் வேல்* | = *நன்மையையுடைய வேலாயுதமானது* |
| *காக்க* | = *காத்தருள் செய்வதாக;* |
| *ஆண்குறி இரண்டும்* | = *பீஜங்கள் இரண்டையும்* |
| *அயில்* | = *கூர்மையாகிய* |
| *வேல்* | = *வேற்படையானது* |
| *காக்க* | = *காத்தருள் செய்வதாக!* |

[விருத்தியுரை]

1. *நாண்-கயிறு; நரம்பு கயிறுபோன்றிருத்தலின், நரம்புக்கு உவமை யாகுபெயராய் 'நாண்' என்று வந்தது. இதனை,*

"திகழு மிரண்டு கால்நாட்டித்
தெளிய வெண்புக் கழிபரப்பி
உகழு நரம்புக் கயிறிருக்கி
உதிரங் கலந்த தசைச்சேற்றால்

புகழுங் கூடம் புனைந்தாக்கி
பூண்ட தோலாற் கூரையிட்டு
நிகழும் வாயி லொன்பதிட்டான்
நேர்ந்து பிரமன் ஜீவனுக்கே.''

என்ற தனிக்க வியாலும் அறியலாம். நரம்பு கருவற்பத்திக்கு ஆதாரம் ஆதலின் ஆண்குறியோடு நரம்பையுங்கூட்டிக் கூறினர்.

2. 'ஆண்குறி இரண்டும்' என்பது இரண்டு பீஜங்களையும்.

3. அயில்—கூர்மை.

4. நாண்—ஆகும்—நாணுகும் என ஐயயம். நாணுகும் என்பது நாணும், தொகுத்தல் விகாரம்; 'ஆம்' ஆகும் என்பதின் விகாரம்.

௬௫ பிட்ட மிரண்டும் பெருவேல் காக்க!
வட்டக் குதத்தை வல்வேல் காக்க!

[பதவுரை]

பிட்டம் இரண்டும் = இரண்டு ஆசன பக்கங்களையும்
பெரு வேல் = பெருமை பொருந்திய வேற்படையானது
காக்க = காத்தருளுவதாக!
வட்டம் = வட்ட வடிவத்தோடு கூடிய
குதத்தை = ஆசன துவாரத்தை
வல் வேல் = வலிமை பொருந்திய வேற்படையானது
காக்க = காத்தருள் செய்வதாக!

[விருத்தியுரை]

1. 'பெரு வேல்' என்றதில் 'பெரு' என்பது பெருமை என்ற பண்புப்பெயரின் விகாரம்.

2. 'வட்டக்குதம்' என்பதில் 'வட்டம்' என்பது வடிவுப் பண்பு.

3. 'வலவேல்' என்பதில் 'வல்' என்பது வன்மை என்றதின் விகாரம்.

சச பணைத்தொடை யிரண்டும் பருவேல் காக்க'
கணைக்கான் முழந்தாள் கதிரவேல் காக்க'

[பதவுரை]

| | |
|---|---|
| பணை | — பருத்த |
| தொடை இரண்டும | — இரண்டு தொடைகளையும் |
| பரு வேல் | — பாரிய வேற்படையானது |
| காக்க | — காத்தருள் செய்வதாக! |
| கணைக்கால | — இரண்டு கணைக்கால்களையும் |
| முழம்தாள் | — இரண்டு முழந்தாள்களையும் |
| கதிர் | — பிரகாசம் பொருந்திய |
| வேல் | — வேலாயுதமானது |
| காக்க | — காத்தருள் செய்வதாக! |

[விருத்தியுரை]

1. பணை-'பருத்த, திரண்ட' என்பதும பொருளாம்; அதை யைத் தொடுத்து நிற்றலின் தொடைக்கு அப்பெயர் வந்தது; இது காரணப்பெயர்.

2. 'பருவேல்' என்பதில் 'பரு' என்றது பருமை என்றதின் விகாரம்.

3. கணைக்கான், முழந்தாள்-உம்மைத்தொகை; கணைக்காலை யும், முழந்தாளையும் என விரியும். கணைக்கால்களை முழந்தாள்களை எனற்பாலன ஒருமையில் வந்தது சாதி ஒருமை என்க.

சரு ஐவிர லடியிணை அருள்வேல் காக்க!
கைக ளிரண்டும் கருணைவேல் காக்க!

[பதவுரை]

ஐவிரல — விரல்கள் ஐந்தைக் கொண்ட
அடி இணை — இரண்டு அடிகளையும்
அருள் வேல் — கருணை தங்கிய வேற்படையானது
காக்க — காத்தருள் செய்வதாக!
கைகள் இரண்டும் — கைகள் இரண்டினையும்
கருணை வேல் — அருள் மிக்க வேலாயுதமானது
காக்க — காத்தருளுவதாக!

[விருத்தியுரை]

1. 'கைக ளிரண்டும்' என்றதில் உள்ள உம்மை முற்றும்மை.

2. ஐவிர லடியிணை - ஐந்துவிரல்களோடு கூடிய இரண்டு பாதங்கள்.

சகூ முன்கை யிரண்டும் முரண்வேல் காக்க!
பின்கை யிரண்டும் பின்னவ ளிருக்க!

[பதவுரை]

முன்கை இரண்டும் — இரண்டு முன்னங்கைகளையும்
முரண் — வலிமை பொருந்திய
வேல் — வேலாயுதமானது
காக்க — காத்தருள் செய்வதாக!
பின்கை இரண்டும் — பின்னங்கை இரண்டிலும்

| | |
|---|---|
| பின்னவள் | = இலட்சுமிதேவியானவள் |
| இருக்க | = வாசஞ்செய்திருப்பாளாக! |

[விருத்தியுரை]

1. 'முன்கை' என்றது முழங்கைக்குக் கீழ்ப் பாகத்தை.

2. 'பின்னங்கை' என்றது முழங்கைக்கு மேற்பாகத்தை; இதனைத் தோளடி அல்லது முண்டா என்பர்.

3. முரண் - 'வலிமை, யுத்தஞ் செய்யும்' என்றும் பொருளாம்.

4. 'பின்னவள்' என்றது இலட்சுமியை; திருப்பாற்கடலில் மூதேவி முன்பிறந்தாள், சீதேவி பின்பிறந்தாள் என்ற இக் காரணத்தாலேயாம். இதனை,

> "சீதேவி யார்பிறந்த செய்யதிருப் பாற்கடலில்
> மூதேவி என்பிறந்தாள் முன்."

என்ற இரட்டையர் வாக்காலும் அறியலாம். செல்வத்திற்கும் வெற்றிக்கும் கைகள் காரணமாதலின் இவ்வாறு கூறினர்.

சஎ நாவிற் சரஸ்வதி நற்றுணை யாக!
நாபிக் கமலம் நல்வேல் காக்க!

[பதவுரை]

| | |
|---|---|
| நாவில் | = நாக்கிலே |
| சரஸ்வதி | = கலைவாணி |
| நல் துணை ஆக | = நல்ல துணை ஆகுவாளாக! |
| நாபிக்கமலம் | = உந்தித் தாமரையை |
| நல் வேல் | = நல்ல வேற்படையானது |
| காக்க | = காத்தருள் செய்வதாக! |

[விருத்தியுரை]

1. 'நாவில்' என்பதில், இல் - இடப்பொருளுருபு.

2. முருகனைப்பாட கலைவாணி துணை அவசிய மாதலினாலும், பாடுந் தொழிலுக்கு நாக்குக கருவியாதலினாலும், 'நாவிற் சரஸ்வதி நற்றுணை யாக' என்றருளினா. இதனாலன்றோ சரஸ்வதிக்கு நாமகள் என்ற பெயரும் ஏற்பட்டது.

3. நாபிக்கமலம் - நாபியாகிய கமலம். உந்தி தாமரைபோ லிருத்தலின் உந்தித்தாமரை, நாபிக்கமலம் என்றுங் கூறினர்.

சஅ முப்பா னாடியை முனைவேல் காக்க!
எப்பொழு தும்மெனை எதிர்வேல் காக்க!

[பதவுரை]

| | |
|---|---|
| முப்பால நாடியை | = மூன்று பிரிவான நாடிகளை |
| முனை | = கூர்மை பொருந்திய |
| வேல் | = வேற்படையானது |
| காக்க | = காத்தருள் செய்வதாக! |
| எனை | = தொண்டனாகிய என்னை |
| எப்பொழுதும் | = எந்தக் காலத்தும் |
| எதிர் | = பகைவரோடு போர்செய்ய எதிர்க்கும் |
| வேல் | = வேலாயுதமானது |
| காக்க | = காத்தருள் செய்வதாக! |

[விருத்தியுரை]

1. 'முப்பான் நாடி' என்றது வாத, பித்த சிலேட்டுமங்களை; இடைகலை, பிங்கலை, சுழிமுனை நாடிகளை' எனப் பொருள் கூறினும் அமையும்.

2. 'எதிர்வேல்' முக்காலத்திற்கும் பொதுவாக நின்றது; வினைத்தொகை.

> "காலங் கரந்த பெயரெச் சம்மே
> வினைத்தொகை"

என்பது சூத்திரம். எதிர்த்த வேல், எதிர்க்கின்ற வேல், எதிர்க்கும் வேல் என முக்காலத்தும் வரும்.

சசு. அடியேன் வசனம் அசைவுள நேரம்
கடுகவே வந்து கனகவேல் காக்க

[பதவுரை]

| | |
|---|---|
| அடியேன் | = தொண்டனுடைய |
| வசனம் | = வார்த்தையானது |
| அசைவுள நேரம் | = (தளர்ந்தேன் காத்தருள் என்று) நாவிலிருந்து அசைவுற்று வெளிப்படுங் காலத்து |
| கனகம் | = பொன்னாலாய |
| வேல் | = வேலாயுதமானது |
| கடுக வந்து | = விரைவோடும் வந்து |
| காக்க | = காத்தருள் செய்வதாக! |

[விருத்தியுரை]

1. 'அடியேன்' என்றது அடிமையேன் என்றதின் விகாரம். அடிமை என்றது, இறைக்குத் தொண்டுபூண்டுள நிலைமையை.

2. சொற்க ளிசைக்க நாவசைந்து ஆகவேண்டியிருத்தலின் 'அசைவுள நேரம்' என்றார்.

3. கடுக - விரைவாக; கடுகு - பகுதி.

௫0 வரும்பக றன்னில் வச்சிரவேல் காக்க!
அரையிரு டன்னில் அனையவேல் காக்க!

[பதவுரை]

| | | |
|---|---|---|
| வரும் | = | வருகின்ற (நாட்களின்) |
| பகல்தன்னில் | = | பகற்காலத்தில் |
| வச்சிரவேல் | = | வயிரவேலானது |
| காக்க | = | காக்கக்கடவது! |
| அரைஇருள்தன்னில் | = | பாதி இராத்திரியில் |
| அனைய | = | அத்தகைய வயிரம்பொருந்திய |
| வேல் | = | வேலாயுதமே |
| காக்க | = | காத்தருள் செய்வதாக! |

[விருத்தியுரை]

1. வரும் பகல்-'இனி வரப்போகும் நாட்களின் பகற் காலத்தில்' என்பது பொருள். 'வரும்' எதிர் காலங் குறித்தது. இனி வரும் பகல் - 'இனி வரு நாட்களில்' எனவும் பொருளாம்.

"பகலே நாளொரு முகூர்த்தம்"
என்பது சூடாமணி நிகண்டு.

2. வச்சிரவேல்-'வயிரமணி அழுத்திய வேல்' எனவும், 'வயிரம் போல உறுதியையுடைய வேல்' எனவும் பொருள் பெறும். வேலின் கடைகளில் வயிரமணி அமைப்பதுண்டு என்கின்றனர். இதனைன்றே,

"வேலின் கடைமணிபோற் றிண்ணியான் காப்பும்"
என்றார் திரிகடுக நூலார்.

3. அரையிருள் - நடுச்சாமம்.

"ஆருந் திரியா அரையிருளில் ஆங்ஙனே"
*என்றார் புகழேந்தியார்.*

"பானாள் யாமம்"
*என்றார் மறறொருவர்.*

ருக ஏமத்திற் சாமத்தில் எதிர்வேல் காக்க!
தாமத நீக்கிச் சதுர்வேல் காக்க!

[பதவுரை]

| | |
|---|---|
| *ஏமத்தில்* | = *முன்னிராக்காலத்திலும்* |
| *சாமத்தில்* | = *நடுராத்திரிககாலத்திலும்* |
| *எதிர* | = *பகைவர்களைத் தாக்குகின்ற* |
| வேல் | = வேலாயுதமானது |
| *காக்க* | = *காத்தருளுவதாக!* |
| *தாமதம் நீக்கி* | = *தாமதத்தை அகற்றி* |
| *சதுர்* | = *சாமர்த்தியமுடைய* |
| வேல் | = வேற்படையானது |
| *காக்க* | = *காத்தருளுவதாக!* |

[விருத்தியுரை]

1. *தாமத நீக்கி-'என்றதற்கு விரைவாக' என்பது பொருள்; இனி, 'அடியேனின் தாமத குணததைப போககி' எனப் பொரு ளுரைப்பாரும் உண்டு.*

ருஉ காக்க காக்க கனகவேல் காக்க!
நோககு நோக்க நொடியி னோக்க!

[பதவுரை]

| | |
|---|---|
| *நொடியில்* | = ஒரு இமைப்பொழுதில் |
| *கனகவேல்* | = (*அடியேனைப்*) பொன் வேல் |

| | |
|---|---|
| காக்க காக்க காக்க | = காத்தருள் செய்வதாக! காத்தருள் செய்வதாக! காத்தருள் செய்வதாக! |
| நோக்க நோக்க நோக்க | = நோக்கி யருள்செய்க! நோக்கி யருள்செய்க! நோக்கி யருள் செய்க! |

[விருத்தியுரை]

1. நொடி - ஒரு மாத்திரைக் காலம்; கைவிரல் நொடிக்கும் காலம்.

"இமை நொடி மாத்திரை"

என்பது சூத்திரம்.

2. அடுக்குகள் விரைவுப்பொருளில் அடுக்கின.

௫௩ தாக்க தாக்க தடையறத் தாக்க!
பார்க்க! பார்க்க! பாவம் பொடிபட.

[பதவுரை]

| | |
|---|---|
| பாவம் | = அடியேனின் பாவங்கள் |
| (நொடியில) | = ஒரு நொடிப்பொழுதில் |
| பொடி பட | = தூளாகி ஒழிய |
| பார்க்க பார்க்க | = நோக்கியருளுக! நோக்கியருளுக! |
| தடை அற | = தடை இன்றி |
| தாக்க தாக்க தாக்க | = அடித்து விலக்கி அருள்! அடித்து விலக்கி அருள்! அடித்து விலகி அருள்! |

[விருத்தியுரை]

1. 'நோக்க நோக்க நொடியி னோக்க' என்ற அடியிலுள்ள 'நொடியை' இவ்வடிகளிலுஞ் சேர்த்துப் பொருள் உரைத்தாம். இது தீபக அலங்காரம்.

2. பாவம் பொடிபட - 'பாவஞ் சாம்பராக' என்பதும் பொருளாம்.

3. நொடி-கை நொடிக்குங் காலம், ஒருகணம் எனினும் ஆம்.

௫௪ பில்லி சூனியம் பெரும்பகை யகல
வல்ல பூதம், வலாஷ்டிகப் பேய்கள்,

௫௫ அல்லற் படுத்தும் அடங்கா முனியும்,
பிள்ளைக டின்னும் புழைக்கடை முனியும்,

௫௬ கொள்ளிவாய்ப் பேய்களும், குறளைப் பேய்களும்,
பெண்களைத் தொடரும் பிரமரா க்ஷதரும்

௫௭ அடியனைக் கண்டால் அலறிக் கலங்கிட
இரிசிகாட் டேரி இத்துன்ப சேனையும்.

[பதவுரை]

பில்லி = எதிரி ஏவும் பில்லிப்பேயும்,
சூனியம் = சூனியமும்,
பெரும் பகை = பெரிய சத்துருவும்
அடியனைக் கண்டால் = அடியேனைப் பார்த்தால்
அகல = (என்னை விட்டு என்முன் நில்லாது) நீங்கி ஓடவும்;
வல்ல பூதம் = வல்லமையுள்ள பூதங்களும்,
வலாஷ்டிகப் பேய்கள் = வல்லமையை யுடைய பிசாசுகளும்,

அல்லல் படுத்தும் = துன்பப்படுத்துகின்ற
அடங்கா முனியும் = மந்திர தந்திரங்கள் எதற்கும் கட்டுப்படாத முனிகளும்
பிள்ளைகள் தின்னும் = பிள்ளைகளை உண்ணும்
புழைக்கடைமுனியும் = புறவாசல் முனியும்,
கொள்ளி வாய் = நெருப்பை வாயிலே கொண்டிருக்கும்
பேய்களும் = பிசாசுகளும்,
குறளைப் பேய்களும் = குட்டைப் பேய்களும்,
பெண்களைத்தொடரும் = பெண்களைப் பின்பற்றித் தொடரும் படியான
பிரமராக்ஷதரும் = பிரமராக்ஷதப் பேய்களும்,
இரிசி = இரிசி என்ற ஒருவகைப் பெண் பேயும்,
காட்டேரி = காட்டேரி என்ற துஷ்ட தேவதையும்
இத்துன்ப சேனையும் = மேற்கூறியதாகிய துன்பத்தை உண்டுபண்ணும் பேய்ப்படைகளும்
அடியனைக் கண்டால் = அடியேனைப் பார்த்தமாத்திரத்தில்
அலறி = அலறிக்கொண்டு
கலங்கிட = கலக்கங்கொண்டு ஓடவும்.

[விருத்தியுரை]

1. பில்லி - ஒருவன் தன் பகைவனைக் கொல்ல மாந்திரீக வித்தையால் பகைவனிடம் அனுப்பும் ஓர்வகைக் கொடிய பேய்.

2. சூனியம் - இது ஒருவன் தன் சத்துரு சாம்படிச் செய்யும் ஒருவகை மந்திரம்; இதனை 'மாரண வித்தை' எனவுங் கூறுவர்.

3. அடங்காமுனி - 'மந்திரத்துக்குக் கட்டுப்படா முனி' என்பது பொருள்.

4. புழைக்கடை - வீட்டின் பின்பக்கத்துள்ள கொல்லைப் பக்கம்.

5. கொள்ளி - நெருப்பு எரி கட்டை.

6. குறளை - குறுகிய வடிவமாயிருப்பது; இது வடிவு அடியாகப் பிறந்த ஆகுபெயராய்க் குறளை என்றும் நிற்கும்.

7. இரிசி - 'இருதுவாகுந் தன்மை இல்லாத ஒரு வகைப் பெண்பேய்' என்பர்.

8. அவமரணமடைந்த பார்ப்பார்களின் ஆவி தாங்கிய பேய் உருவங்களைப் 'பிரமராக்ஷதர்' என்பர்.

9. இவ் வடிகளில் உள்ள 'அகல' 'கலங்கிட' என்ற எச்சங்களும், பின்வரும் 'ஓடிட' என்ற எச்சமும், அதற்குப் பின்வரும் 'கட்டு' என்ற வினைமுற்றைக் கொண்டு முடியும்.

"வினை எஞ்சுகிளவி வினையோடு முடியும்."
என்பது விதி.

ருஅ எல்லினு மிருட்டிலும் எதிர்படு மண்ணரும்,
கனபூசை கொள்ளும் காளியோ டனைவரும்,
ருகூ விட்டாங் காரரும், மிகுபல பேய்களும்,
தண்டியக் காரரும், சண்டா ளங்களும்
கூ0 என்பெயர் சொலவும் இடிவிழுந் தோடிட
ஆணை யடியினில் அரும்பா வைகளும்.

[பதவுரை]

எல்லினும் = பகலிலும்
இருட்டிலும் = இராத்திரியிலும்
எதிர்படும் = எதிர்த்து வருகின்ற

அண்ணரும் = அண்ணரென்ற தேவதைகளும்,
கனம் = மிகுந்த
பூசை = பூஜைகளை
கொள்ளும் = பெற்றடையும்
காளியோடு = காளிதேவதையோடு
அனைவரும் = காளியைச்சேர்ந்த படைகளாகிய மற்றைத் தேவர்களும்,
விட்டாங்காரரும் = விட்டாங்காரர் என்னும் ஒருவகைப் பூதங்களும்,
மிகு பல பேய்களும் = (இன்னும்) மிகுந்த பலமுடைய பேய்களும்,
தண்டியக்காரரும் = பல்லக்கில் வரும் பூதங்களும்,
சண்டாளங்களும் = புலைத்தன்மை பொருந்திய பேய்களும்,
ஆனை = யானையின்
அடியினில் = பாதத்திற்குக்கீழ பூமியிலே (புதைக்கப்பட்ட)
அரும்பாவைகளும் = பிரதிமைகளும் (அவற்றால் வரும் சங்கடங்களும்),
என்பெயர் சொலவும் = என் பெயர் சொன்னவுடனே
இடி விழுந்து = நெஞ்சிலிடிக்கும் பெரும் பயங்கொண்டு
ஓடிட = ஓடவும்.

[விருத்தியுரை]

1. எதிர்படும் - 'எதிராகி வருகின்ற' என்பது பொருள். இனி, 'எதிர்த்து வந்து அழிக்கின்ற,' 'துன்பப்படுத்துகின்ற' என்றும் பொருள் உரைப்பர்.

2. அண்ணர் - ஓர்வகை ஆண் தெய்வங்கள்.

3. காளிக்குப் பூஜை மிகுதியாக இடவேண்டு மாதலின் 'கண பூசை கொள்ளும் காளி' என்றார்.

4. சண்டாளம் - புலைத்தன்மை; புலைத்தன்மையை யுடைய பேய்களுக்கான து ஆகுபெயர்.

5. இடிவிழுந்தோட - 'நெஞ்சிலிடிக்கும் பெரும்பயங்கொண் டோட' என்பது பொருள்; இனி, 'இடிவிழுந்ததுபோல அஞ்சி யோட' எனவும் பொருள் கூறுவர்.

6. "பாவைகளை மாவினாற் செய்து மந்திரித்து யானை நிலை யில் அதன் காலடி படுமிடத்தில் வைத்தால் யாரைக் குறித்து வைத் ததோ அவனுக்குச் சீக்கிரம் அழிவு வரும்" என்பது மாந்திரீகர் கூற்று.

௬௧ பூனை மயிரும், பிள்ளைக ளென்பு
நகமு மயிரும், நீண்முடி மண்டையும்,

௬௨ பாவைக ளுடனே பலகல சத்துடன்
மனையிற் புதைத்த வஞ்சனை தனையும்,

௬௩ ஒட்டியச் செருக்கும், ஒட்டியப் பாவையும்
காசும் பணமும் காவுடன் சோறும்,

௬௪ ஓதுமஞ் சனமும், ஒருவழிப் போக்கும்,
அடியேனைக் கண்டால் அலைந்து குலைந்திட.

[பதவுரை]

பூனை = பூனையினுடைய
மயிரும் = மயிரும்,
பிள்ளைகள் என்பும் = சிறு குழந்தைகளின் எலும்பும்,

| | |
|---|---|
| நகமும் | = நகங்களும், |
| மயிரும் | = அப் பிள்ளைகளின் மயிரும், |
| நீள் | = நீண்ட |
| முடி | = மயிர்முடியைக் கொண்ட |
| மண்டையும் | = சிரமும், |
| பாவைகளுடனே | = பல மாப்பதுமைகளுடனேயும் |
| பல கலசத்துடன் | = பலவிதமான மண்ணாற் செய்த கலசங்களுடனேயும் |
| மனையில் புதைத்த | = (என்னை அழிக்க என்) வீட்டில் புதைத்துவைத்த |
| வஞ்சனைதனையும | = கபடமாகச் செய்த மந்திரதந்திர மாரணச் செய்கையையும், |
| ஒட்டியர் செருக்கும் | = (எனது பகைவரின்) 'ஒட்டிய மாந்திரீக நூல் கற்றிருக்கிறோம்' என்ற அகங்காரத்தையும், |
| ஒட்டியப்பாவையும் | = (என்னைக் கொல்ல) ஒட்டிய நூல் விதிப்படி மந்திரித்துச் செய்த மாப்பதுமையும், |
| காசும் பணமும் | = (என்னைக் கொல்லப் பேய்களுக்குத் தட்சணையாகக் கொடுக்கும்) இரத்தினங்களும் நாணயங்களும், |
| காவுடன் | = ஆடு கோழி காவுடன் |
| சோறும் | = உதிரத்தில் புரட்டிய சோறும், |
| ஓதும் | = சொல்லுகின்ற |
| அஞ்சனமும் | = எதிரிகள் கற்ற அஞ்சன வித்தையும், |

| | |
|---|---|
| ஒருவழிப் போக்கும் | = பித்துப்பிடித்து ஒரே வழியாகப் போகச் செய்யும் மாந்திரீகத் தொழிலும், |
| அடியனைக் கண்டால் | = அடியேனைப் பார்த்தால் |
| அலைந்து | = வருந்தி |
| குலைந்திட | = அழியவும். |

[விருத்தியுரை]

1. ஒட்டியம் - ஓர் வகை மாந்திரீக நூல்.
2. காவு - பலி.
3. அஞ்சனம் - பிறர் ரகசியத்தையும், மறைந்துள்ளவற்றையும் தூரத்து நடப்பனவற்றையும் உணர்த்தும் மாந்திரீக மை.

௩௫ மாற்றான் வஞ்சகர் வந்து வணங்கிட
காலதூ தாளெனைக் கண்டாற் கலங்கிட

௩௬ அஞ்சி நடுங்கிட அரண்டு புரண்டிட
வாய்விட் டலறி மதிகெட் டோட

௩௭ படியினின் முட்டப் பாசக் கயிற்றால்
கட்டுட னங்கம் கதறிடக் கட்டு!

[பதவுரை]

| | |
|---|---|
| மாற்றான் | = சத்துருவும் |
| வஞ்சகர் | = வஞ்சகர்களும் |
| வந்து வணங்கிட | = வந்து என்னை வணங்கிடவும், |
| காலதூதாள் | = எமதூதர்கள்; |
| கண்டால் | = என்னைக் கண்டால் |
| கலங்கிட | = மனங் குழம்பவும், |

| | |
|---|---|
| அஞ்ச | = பயந்து |
| நடுங்கிட | = உடல் பயத்தால் நடுங்கவும், |
| அரண்டு | = பயந்து மருண்டு |
| புரண்டிட | = கீழ் வீழ்ந்து புரளவும், |
| வாய்விட்டு அலறி | = வாயைத் திறந்து கதறி |
| மதி கெட்டு | = புத்தி கெட்டு |
| ஓட | = ஓடவும், |
| படியினில் | = பூமியில் |
| முட்ட | = முட்டிக்கொள்ளவும், |
| பாசக் கயிற்றால் | = பாசக்கயிற்றினாலே |
| கட்டு | = கட்டியருளுக! |
| உடன் | = உடனே |
| அங்கம் | = அவயவங்களை |
| கதறிட | = கதறும்படிக்கு |
| கட்டு | = கட்டியருள்வாயாக! |

[விருத்தியுரை]

1. 'மாற்றான்' மாறு என்ற பகுதி அடியாகப் பிறந்தது.

2. காலன் - ஜீவப் பிராணிகளின் வாழ்நாட் காலத்தைக் கொள்கின்றவன் ஆகலின் கூற்றனுக்குக் 'காலன்' என்ற பெயர் உண்டாயிற்று.

3. 'தாதாள்' இதில் ஆள் விகுதி பன்மைப் பாலை உணர்த்தியது.

4. பாசக்கயிறு - 'பாசமாகிய கயிறு' என விரியும்.

5. 'கயிற்றால்' என்பதில் உள்ள ஆல் மூன்றாம் வேற்றுமை உருபு, கருவிப்பொருளில் வந்தது.

6. 'கட்டுடனங்கம்' என்றதில் 'அங்கம்' செயப்பாட்டுப் பொருளது.

சுஅ கட்டி யுருட்டு கால்கை முறிய
கட்டு! கட்டு! கதறிடக் கட்டு.

[பதவுரை]

| | |
|---|---|
| *கால்* | = *காலும்* |
| *கை* | = *கையும்* |
| *முறிய* | = *ஒடியவும்,* |
| *கதறிட* | = *(அதனால் அவர்கள்) கதறவும்* |
| *கட்டு! கட்டு! கட்டு!* | = *(பாசத்தினால், கட்டியருளுவாய்! கட்டியருளுவாய்! கட்டியருளுவாய்!* |
| *கட்டி* | = *அந்தவிதமாகக் கட்டி* |
| *உருட்டு* | = *கீழே உருட்டியருள்வாயாக!* |

[விருத்தியுரை]

1. *அடுக்குகள் சினத்தான் அடுக்கின; ஈதும் விரைவுப் பொருளே என்பாரும் உண்டு.*

சுகூ முட்டு! முட்டு! முழிகள் பிதுங்கிட
செக்கு! செக்கு! செதிற்செதி லாக.

[பதவுரை]

| | |
|---|---|
| *முழிகள் பிதுங்கிட* | = *கண்விழிகள் வெளியே பிதுங்கி வந்து வருந்த* |
| *முட்டு! முட்டு!* | = *மோது! மோது!* |
| *செதில் செதிலாக* | = *தேகங்கள் பட்டை பட்டையாய் உதிரும்படி* |
| *செக்கு செக்கு* | = *கொல்லு! கொல்லு!* |

[விருத்தியுரை]

1. முழிகள் - விழிகள் என்பதின் சிதைவு.

2. பிதுங்குதல் - வெளிப்படுதல்.

3. 'செகு' என்பது ஒற்று மிக்கு 'செக்கு, செக்கு' என நின்றது.

௭௦ சொக்கு! சொக்கு! சூர்ப்பகைச் சொக்கு!
குத்து! குத்து! கூர்வடி வேலால்.

[பதவுரை]

| | |
|---|---|
| சொக்கு! சொக்கு! | = அழகனே! அழகனே! |
| சூர்ப்பகை | = சூரர்களுக்குப் பகையாகி அவர்களை அழித்த |
| சொக்கு! | = அழகனே! |
| கூர் வடி வேலால் | = கூரிய வடித்தெடுக்கப்பெற்ற வேலால் |
| குத்து! குத்து! | = குத்தியருள்வாயாக! குத்தியருள்வாயாக! |

[விருத்தியுரை]

1. சொக்கு-அழகு; அழகையுடைய முருகருக்குச் 'சொக்கு' என்றாயது ஆகுபெயர். சோமசுந்தரர்க்குச் 'சொக்கர்' என்ற திருநாமம் உண்டு; அவர் சுந்தரம்பற்றி வந்ததே.

2. 'கூர்வடி' மீமிசை என்பாரும் உண்டு.

௭௧ பற்று! பற்று! பகலவன் றணலெரி!
தணலெரி! தணலெரி! தணலது வாக.

[பதவுரை]

| | |
|---|---|
| பற்று! பற்று! | = பிடி! பிடி! |
| பகலவன் | = சூரியனிடத்தேயுள்ள |
| தணல் அதுவாக | = அந்தத் தழல் ரூபம் ஆகும்படி |
| தணல் எரி! | = நெருப்பை எரித்தருளுவாய்! |
| தணல் எரி! | = நெருப்பை எரித்தருளுவாய்! |
| தணல் எரி | = நெருப்பை எரித்தருளுவாய்! |

[விருத்தியுரை]

1. பகலைச் செய்தலினால் சூரியனுக்குப் 'பகலவன்' என்ற பெயர் ஏற்பட்டது.

எ௨ விடுவிடு வேலை வெருண்டது வோட
புலியு நரியும் புன்னரி நாயும்

எ௩ எலியுங் கரடியும் இனித்தொடர்ந் தோடத்
தேளும் பாம்பும் செய்யான் பூரான்

எ௪ கடிவிட விஷங்கள் கடித்துய ரங்கம்
ஏறிய விஷங்கள் எளிதுட னிறங்க.

| | |
|---|---|
| புலியும் | = (அடியேனைக் கொல்லும் பொருட்டாக வரும்) புலியும் |
| வெருண்டது ஓட | = பயங்கொண்டு ஓடவும்; |
| நரியும் | = பெரிய நரியும், |
| புல் நரியும் | = சிறு நரியும் |
| நாயும் | = நாய்களும், |
| எலியும் | = எலிகளும், |

காடியும = காடிகளும
இனி = இனிமேல்
தொடர்ந்து = (பயங்கொண்டு) ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து
ஓட = ஓடவும்;
தேளும் = தேள்களும்,
பாம்பு = பாம்புகளும்,
செய்யான் = பெருஞ்சாதிப் பூரான்களும்,
கடிவு = கடித்தலைக் கொண்ட
இடம் = இடத்திற் றங்கிய
விஷயங்கள் = விஷயங்களும்
கடித்து = பற்களால் கடித்து
உயர் அங்கம் = உயர்ந்த சரீரத்தில்
றிய விஷங்கள் = ஏறிய விஷயங்களும்
எளிது = இலேசாக
உடன் = சீக்கிரத்தில்
இறங்க = இறங்கிவிடவும்
வேலை = வேலாயுதத்தை
விடுவிடு = ஏவிவிட்டருளுவாய்!

[விருத்தியுரை]

1. 'புலியும்' என்றதில் உள்ள உம்மை எதிரது தழீஇய எச்ச உம்மை.

2. 'நரி' என்றும்,'புன்னரி' என்றுங் கூறினதால் முன்னது பெரு நரியும், பின்னது சிறு நரியும் ஆயிற்று.

எரு ஒளிப்புஞ் சுளுக்கும் ஒருதலை நோயும்
வாதஞ் சயித்தியம் வலிப்புப் பித்தம்

எசு சூலைசயங் குன்மம் சொக்குச் சிரங்கு
குடைச்சல் சிலந்தி குடல்விப் பிருதி

எஎ பக்கப் பிளவை படர்தோடை வாழை
கடுவன் படுவன் கைத்தாட் சிலந்தி

எஅ பற்குத் தரணை பருவரை யாப்பும்
எல்லாப் பிணியும் என்றனைக் கண்டால்

எகூ நில்லா தோட நீயெனக் கருள்வாய்!
ஈரே ழுலகமும் எனக்குற வாக

அ0 ஆணும் பெண்ணும் அனைவரு மெனக்கா
மண்ணு ளரசரும் மகிழ்ந்துற வாகவும்.

[பதவுரை]

| | |
|---|---|
| ஒளிப்பும் | = உரு மறைவும், |
| சுளுக்கும் | = நரம்பு சுளுக்குதலும், |
| ஒருதலை நோயும் | = ஒருபக்கத் தலைவலியும், |
| வாதம் | = வாயுசம்பந்தமான வியாதியும், |
| சயித்தியம் | = குளிர்நோயும், |
| வலிப்பு | = இழுப்புநோயும், |
| பித்தம் | = பித்தநோயும், |
| சூலை | = சூலைநோயும், |
| சயம் | = க்ஷயரோகமும் |
| குன்மம் | = குன்மநோயும், |
| சொக்கு | = சோர்வை யுண்டாக்கும், |
| சிரங்கு | = சிரங்குரோகமும், |
| குடைச்சல் | = கைகாற் குடைச்சலும், |
| சிலந்தி | = சிலந்திக்கட்டியும், |

| | |
|---|---|
| குடல் விப்புருதி | = குடலில் உண்டாகும் சிலந்திக்கட்டியும், |
| பக்கப்பிளவை | = விலாப்புறங்களில் தோன்றும் பிளவையும், |
| படர் | = பரவுகின்ற |
| தொடை வாழை | = தொடைவாழை என்று சொல்லப் படுங் கட்டியும், |
| கடுவன் | = கடுவனும், |
| படுவன் | = படுவன் என்கிற சிலந்தியும், |
| கைத்தாள் சிலந்தி | = கைகாற் சிலந்திகளும், |
| பல் குத்து | = பற்குத்து வலியும் |
| அரணை | = பல்லரணையும், |
| பரு | = பருக்கட்டிகளும் |
| அரையாப்பு | = அரையாப்புக்கட்டியும் |
| எல்லாப் பிணியும் | = மேற்கூறிய எல்லா வியாதிகளும் |
| என்றனைக் கண்டால் | = என்னைக் கண்டமாத்திரத்தில் |
| நில்லாது | = நிற்காது |
| ஓட | = நீங்கி ஒழிய |
| நீ | = ஓ முருகக்கடவுளே ! தேவரீராகிய நீர் |
| எனக்கு | = அடியேனாகிய எனக்கு |
| அருள்வாய்! | = கிருபை செய்தருள்வீராக! |
| ஈரேழு உலகமும் | = பதினான்கு புவனங்களும் |
| எனக்கு | = அடியேனாகிய எனக்கு |
| உறவு ஆக | = சிநேகமாகவும், |
| ஆணும் | = ஆண்மக்களும் |
| பெண்ணும் | = பெண்மக்களும் |

| | |
|---|---|
| அனைவரும் | = எல்லோரும் |
| மண் ஆள் | = பூமியை ஆட்சி செய்கின்ற |
| அரசரும் | = மன்னர்களும் |
| எனக்காக | = என் நிமித்தமாக |
| மகிழ்ந்து | = சந்தோஷ மடைந்து |
| உறவாகவும் | = சிநேகங்கொள்ளவும், |
| நீ | = முருககடவுளே! நீர் |
| எனக்கு | = அடியேனுகிய எனக்கு |
| அருள்வாய்! | = கிருபை செய்தருளுவீராக! |

[விருத்தியுரை]

1. உருவத்தை மறைக்கும் குட்டமுதலிய நோய்களையும், மேகரோகங்களையும் 'ஒளிப்பு' என்றார். இது ஆகுபெயர்.

2. தலையின் ஒரு பக்கமாக வலித்தலால் 'ஒருதலை நோய்' என்றார். இதனை 'ஒருத்தலை நோய்' என்றலும் உண்டு.

3. சொக்கு - மயக்கமும் ஆம்.

4. அரையாப்பு - அரையில் வருகின்ற கட்டி; அரை-இடுப்பு; இது எண்ணளவை ஆகுபெயர்; உடம்பின் பாதி இடம் என்பது பொருள்.

5. மக்களைப் பிணிக்கின்றமையால் 'பிணி' என்றார்; பிணித்தல் - கட்டல்.

6. இதில் உள்ள உம்மைகள் எண்ணும் மைகள்.

௮௧ உன்னைத் துதிக்க உன்திரு நாமம்
சரஹண பவனே! சைலொளி பவனே!

௮௨ திரிபுர பவனே! திகழொளி பவனே!
பரிபுர பவனே! பவமொளி பவனே!

௯௩. அரிதிரு மருகா ! அமரா பதியைக்
காத்துத் தேவர்கள் கடுஞ்சிறை விடுத்தாய் !

[பதவுரை]

| | |
|---|---|
| சரஹணபவனே! | — சரவணப்பொய்கையில் உதித்தவனே! |
| சைல் | — மலைகளில் |
| ஒளி பவனே! | — ஜோதிமயமான கடவுளே ! |
| திரிபுரபவனே! | — திரிபுரத்தை அழித்த சிவபெருமானை ஒத்தவனே! |
| திகழ் | — பிரகாசிக்கின்ற |
| ஒளி | — பிரகாசத்தையுடைய |
| பவனே! | — கடவுளே! |
| பரிபுரபவனே! | — பாதச்சிலம்பை அணிந்த மேன்மை உடையவனே! |
| பவம் | — பாவமானது |
| ஒளி | — மறையத்தக்க |
| பவனே! | — சக்தியை உடையவனே ! |
| அரி | — திருமாலுக்கும் |
| திரு | — லட்சுமி தேவிக்கும் |
| மருகா! | — மருமகனே! |
| உன்னை | — உன்னையும் |
| உன் திரு நாமம் | — உன்னுடைய அழகிய திருநாமத்தையும் |
| துதிக்க | — துதிசெய்ய (அத் தேவரின்) |
| அமராபதியை | — பொன்னுலகத்தை |
| காத்து | — ரட்சித்து |

| | |
|---|---|
| தேவர் | = அமரர்களுடைய |
| கடும் சிறை | = கடிதாகிய சிறைவாசத் துன்பத்தையும் |
| விடுத்தாய் | = நீக்கியருளினவனே ! |

[விருத்தியுரை]

1. முருகர் குறிஞ்சிநிலக் கடவுள் ஆதலின் 'சைல ஒளி பவனே!" என்றார். சைலம்-மலை.

2. திரிபுரம் - அசுரர்களின் வரபலம் பெற்ற கோட்டையை; இது சிவபெருமானார் சிறுநகையாற் சீரழிந்து சிதைந்து பொடியாயிற்று.

3. பரிபுரம் - பாதச் சிலம்பு.

4. மாலின் மகளார்களாகிய சுந்தரி, அமுதவல்லியே, வள்ளி தேவானைகளாக அவதரித்தனராதலினாலும், பார்வதி நாரணனுக்குத் தங்கை முறையாதலாலும் முருகரை ' அரி திருமருகா!' என்றார். இதில் முருகர் மாலுக்குத் தன் மக்களை மணந்த மருகனும், தன் தங்கை வயிற்றிற் பிறந்த மருகனும் ஆதல் காண்க.

௮௪ கந்தா! குகனே! கதிர்வே லவனே!
காா்த்திகை மைந்தா! கடம்பா! கடம்பனை

௮௫ இடும்பனை யழித்த இனியவேள் முருகா!
தணிகா சலனே! சங்கரன் புதல்வா!

[பதவுரை]

| | |
|---|---|
| கந்தா! | = கந்தக் கடவுளே! |
| குகனே! | = குகப்பெருமானே! |
| கதிர் | = பிரகாசத்தையுடைய |

வேலவனே! = வேற்படையைத் தாங்கியவனே!
கார்த்திகை மைந்தா! = கார்த்திகை முதலிய நட்சத்திர மாதர்கள் வளர்த்த புத்திரனே!
கடம்பா! = கடப்பமலர் மாலையைத் தாங்கியவனே!
கடம்பனை = கடம்பனையும்
இடும்பனை = இடும்பனையும்
அழித்த = சம்மாரஞ் செய்த
இனிய = இனிமை பொருந்திய
வேல் = வேற்படையையுடைய
முருகா! = முருகக்கடவுளே!
தணிகாசலனே! = திருத்தணிகை வெற்பில் எழுந்தருளியிருப்பவனே!
சங்கரன் புதல்வா! = சிவபெருமானின் மைந்தனே!

[விருத்தியுரை]

1. முருகப்பிரான் இடும்பனை வென்ற கதை பழநித்தலப் புராணத்தா லறியலாம். அப் பழநியில் இடும்பன்மலையும் இருக்கின்றது. இடும்பனை வென்று அவனுக்கு அருள்செய்தமையால் இடும்பனுக்கு முதல் பூசையும் இடுகின்றார்கள். இடும்பன்தான் பழநிமலையைக் கொணர்ந்தவன் என்பது அத் தலபுராணம்.

அசூ கதிர்கா மத்துறை கதிர்வேன் முருகா!
பழநிப் பதிவாழ் பால குமாரா!

[பதவுரை]

கதிர்காமத்து உறை = கதிர்காமம் என்னும் திருக்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருக்கின்ற

| | |
|---|---|
| கதிர் | = பிரகாசத்தைச் செய்கின்ற |
| வேல் | = வேலாயுதத்தையுடைய |
| முருகா! | = முருகக்கடவுளே! |
| பழநிப் பதி வாழ் | = பழநி யென்னும் திருத்தலத்திலே எழுந்தருளியிருக்கின்ற |
| பால குமாரா! | = பாலப் பருவத்தை யுடையனாகிய குமாரக்கடவுளே! |

[விருத்தியுரை]

1. கதிர்காமம்-இது ஒரு சுப்பிரமணியர் திருத்தலம்; இது ஈழநாட்டிலுள்ளது.
2. குமாரா - கௌமார பருவத்தை உடையவனே!
3. 'பால குமாரா!' என்றது 'குழந்தைக் குமாரா!' என்பதாம்.

அஎ ஆவினன் குடிவாழ் அழகிய வேலா!
செந்தின்மா மலையுறும் செங்கல்வ ராயா!

[பதவுரை]

| | |
|---|---|
| ஆவினன்குடி | = திருவாவினன்குடி என்னும் திருத்தலத்தில் |
| வாழ் | = வாழ்கின்ற |
| அழகிய வேலா! | = அழகிய வேற்படையையுடையவனே! |
| செந்தில் | = திருச்செந்தூர் என்னும் திருத்தலத்தில் உள்ள |
| மா மலை உறும் | = சிறந்த மலையிலே எழுந்தருளியிருக்கும் |
| செங்கல்வராயா! | = செங்கல்வராயனே! |

[விருத்தியுரை]

1. *திருவாவினன்குடி என்பது பழநி க்ஷேத்திரத்தை; லட்சுமி தேவியும், காமதேனுவும், சூரியனும் பூசித்த இடம் ஆதலின் இப் பேர் வந்தது. திரு-லட்சுமி, ஆ - காமதேனு, இனன் - சூரியன்.*

2. *முருகர் செவ்விய திருஉருவம் உடையவர் ஆதலின் 'செங்கல்வராயா!' என்று கூறினர்போலும்.*

௮௮ சமரா புரிவாழ் சண்முகத் தரசே!
காரார் குழலாள் கலைமக ணன்றாய்

௮௯ என்நா விருக்க யானுனைப் பாட
எனைத்தொடர்ந் திருக்கும் எந்தை முருகனை.

[பதவுரை]

| | |
|---|---|
| *சமராபுரி* | = *சமராபுரி என்னும் திருத்தலத்தில்* |
| *வாழ்* | = *வாழ்ந்தருளும்* |
| *சண்முகத்து அரசே!* | = *சண்முகன் என்னும் திருநாமத்தையுடைய அரசே!* |
| *கார் ஆர்* | = *மேகத்தை ஒத்த* |
| *குழலாள்* | = *கூந்தலை உடையவராகிய* |
| *கலைமகள்* | = *வாணியானவள்* |
| *நன்றாய்* | = *செம்மையாக* |
| *என் நா* | = *அடியேனுடைய நாவில்* |
| *இருக்க* | = *எழுந்தருளி இருப்பதனால்* |
| *யான் உனைப் பாட* | = *அடியேன் உன்னைப் பாடிட* |
| *எனைத் தொடர்ந்திருக்கும்* | = *அடியேனைத் தொடர்ந்துகொண்டிருக்கும்* |

| | |
|---|---|
| எந்தை | = என் தந்தையாகிய |
| முருகனை | = முருகக் கடவுளை. |

[விருத்தியுரை]

1. சமராபுரி - சுப்பிரமணியர் எழுந்தருளி யிருக்கும் திருத் தலம்.

2. சண்முகன் - ஆறு திருமுகங்களை யுடையவன்; இது வடமொழி; இதற்கு 'ஆறுமுகன்' என்பது நேர் தமிழ்.

3. கார் - மேகம்; இது ஆகுபெயர்; கருப்பாய் இருப்பது என்பது பொருள்; 'கரிய நிறங்கொண்ட' என்பதும் பொருளாம்.

4. முருகன் - 'அழகையுடையவன்' என்பது பொருளாம்.

௯௦ பாடினே னாடினேன் பரவச மாக
ஆடினே னாடினேன் ஆவினன் பூதியை.

[பதவுரை]

| | |
|---|---|
| பாடினேன் | = துதிப்பாடல்கள் பாடினேன் ; |
| பரவசமாக | = மிகு களிப்போடு என்னை மறந்து |
| ஆடினேன் | = (ஆனந்தக்கூத்து) ஆடினேன், |
| ஆடினேன் | = ஆடினேன், |
| ஆடினேன் | = ஆடினேன்; |
| ஆவினன் | = சிவபெருமானின் |
| பூதியை | = விபூதியை. |

[விருத்தியுரை]

1. 'ஆவினன்' மாட்டை வாகனமாக உடைய சிவபெரு மானை உணர்த்திற்று. ஆவினன் - என்பதற்கு 'இரக்கம் உடைய வன்' எனவும் பொருள் கூறுவர்.

2. தன்வசந் தப்பி ஆனர்தத்தின் வசமாயிருத்தல் 'பரவசம்.'

3. 'ஆடினேன்' என்பது மிகுதியால் அடுக்கியது. மும்முறை அடுக்கு.

4. 'நாடினேன் ஆவினன் பூதியை' எனப் பொருளுரைப்பாரும் உண்டு.

கக நேச முடன்யான் நெற்றியி லணியப்
பாச வினைகள் பற்றது நீங்கி.

[பதவுரை]

| | |
|---|---|
| பாசம் | — மாயாசம்பந்தமான |
| வினைகள் | — செயல்களின் |
| பற்றது | — தொடர்ச்சியை |
| நீங்கி | — விட்டுப் பிரிந்து |
| நேசமுடன் | — அன்போடு |
| யான் | — அடியேன் |
| நெற்றியில் அணிய | — அவ் விபூதியை நெற்றியி லணிய. |

[விருத்தியுரை]

1. 'நேசம்' ஈண்டு 'அன்பு' என்னும் பொருளது.

2. பாசவினை - 'பாசத்தால் ஆகிய வினை' என்பது பொருளாம்.

3. 'நேச முடன்யான் நெற்றியில் அணியப்' 'பாச வினைகள் பற்றது நீங்கி' எனவும் நேராய்ப் பொருள் கொள்ளலாம்.

கஉ உன்பதம் பெறவே உன்னரு ளாக
அன்புட னிரக்ஷி! அன்னமுஞ் சொன்னமும்

கூரு மெத்தமெத் தாக வேலா யுதனுர்
சித்திபெற் றடியேன் சிறப்புடன் வாழ்க!

[பதவுரை]

| | |
|---|---|
| உன் பதம் | = தேவரீரது திருவடியை |
| பெறவே | = அடைய |
| உன் அருள் | = உன்னுடைய கிருபாநோக்கமானது |
| ஆக | = என்மீது உண்டாவதாகவும்; |
| அன்னமும் | = சோறும் |
| சொனனமும் | = பொன்னும் |
| மெத்த மெத்த | = மிக மிக |
| ஆக | = உண்டாவதாகவும்; |
| அன்புடன் | = தேவரீர பிரியத்தோடு |
| இரக்ஷி! | = அருள் செய்து காத்தருள்வீராக! |
| சித்தி பெற்று | = இட்டகாமியங்கள் கைகூடப்பெற்று |
| சிறப்புடன் | = அழகுடனே |
| வாழ்க! | = வாழக்கடவேனுக! |

[விருத்தியுரை]

1. பாதம் எனற்பாலது 'பதம்' எனக் குறுகியது.

2. 'அன்னமுஞ் சொன்னமும்' என்ற உம்மைகள் எண்ணும் மைகள். அன்னமுஞ் சொன்னமும் உலகத்தவர்க்கு இன்றியமை யாதது ஆதலின் கூறினுர். பிறதலன்றே,

"அன்ன விசார மதுவே விசார மதுவொழிந்தாற்
சொன்ன விசாரந் தொலையா விசாரம்"

என்றார் பட்டினத்தடிகளும்.

4. மெத்தவாக என்பது 'மெத்தாக' என ஆயது தொகுத்தல் விகாரம்.

௨௪ வாழ்க! வாழ்க! மயிலோன்! வாழ்க!
வாழ்க! வாழ்க! வடிவேல் வாழ்க!

| | |
|---|---|
| மயிலோன் | = மயில் வாகனத்தையுடைய முருகக் கடவுளே! |
| வாழ்க! | = தேவரீர் வாழ்ந்திருக்கக் கடவீராக! |
| வாழ்க! | = தேவரீர் வாழ்ந்திருக்கக்கடவீராக! |
| வாழ்க! | = தேவரீர் வாழ்ந்திருக்கக்கடவீராக! |
| வடிவேல் | = தேவரீரது திருக்கரத்துள்ள வடித்தெடுக்கப்பெற்ற வேலாயுதமானது |
| வாழ்க! | = வாழ்ந்திருப்பதாக! |
| வாழ்க! | = வாழ்ந்திருப்பதாக! |
| வாழ்க! | = வாழ்ந்திருப்பதாக! |

[விருத்தியுரை]

1. முருகப்பிரான் வாழ்ந்திருப்பின் சர்வலோகமும் வாழும், அடியேனும் வாழ்வேன் என்ற பொருளால் 'வாழ்க' என்றார்; இதனாலன்றோ ஆழ்வாராதிகளும் "பல்லாண்டு பல்லாண்டு" என்றனர்.

2. அடியார்க்கு அருளை வேலினாற் செய்தாராதலின் வேலையும் வாழ்த்தினார்.

3. 'வாழ்க' என்பது மும்முறை அடுக்கியது; இது மகிழ்ச்சியால் என்க.

௨௫ வாழ்க! வாழ்க! மலைக்குரு வாழ்க!
வாழ்க! வாழ்க! மலைக்குற மகளுடன்!

[பதவுரை]

| | |
|---|---|
| மலை | = மலைகளில் விரும்பி வசிக்கின்ற |
| குரு | = எமது குருவாகிய முருகப்பிரான் |
| வாழ்க! | = வாழ்ந்திருப்பீராக! |
| வாழ்க! | = வாழ்ந்திருப்பீராக! |
| வாழ்க! | = வாழ்ந்திருப்பீராக! |
| மலை | = மலைநாட்டில் வளர்ந்த |
| குறமகளுடன் | = வள்ளியம்மையாரோடு |
| வாழ்க! | = வாழ்ந்திருப்பீராக! |
| வாழ்க! | = வாழ்ந்திருப்பீராக! |

[விருத்தியுரை]

1. முருகப்பிரான், குறிஞ்சிநிலக்கடவுள் ஆதலின் 'மலைக் குரு' என்றார்.

2. குறமகள் இச்சாசத்தி ஆதலின் 'மலைக்குறமகளுடன்' என்றார்.

௯௯ வாழ்க! வாழ்க! வாரணத் துவசம்,
வாழ்க! வாழ்கவென் வறுமைக ணீங்க.

[பதவுரை]

| | |
|---|---|
| வாரணம் | = கோழியாகிய |
| துவசம் | = (முருகப்பிரானே!) உமது துவஜம் |
| வாழ்க! | = வாழ்ந்திருப்பதாக! |
| வாழ்க! | = வாழ்ந்திருப்பதாக! |
| வாழ்க! | = வாழ்ந்திருப்பதாக! |
| வாழ்க! | = வாழ்ந்திருப்பதாக! |

என் வறுமை = அடியேனின் மிடி
நீங்க! = தொலைவனவாக !

[விருத்தியுரை]

1. சூரன் கோழியாக அமைந்தான்; அவனே துவஜமாயினன்.

2. ஒருவர் வெற்றியைத் துவஜ முணர்த்துவ தாதலின் கொடியை வாழ்த்தினர்.

"சேவலும் மயிலும் போற்றி"

என்னும் கந்தப்புராணக் காப்பு கவனிக்கற்பாலது.

3. வறுமைத்துன்பம் பொறுக்கொணாதது ஆதலின் 'வறுமை நீங்க' என்றார். இதனையன்றோ.

"நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது."

என்றார் திருவள்ளுவரும்.

௩௭ எத்தனை குறைகள் எத்தனை பிழைகள்
எத்தனை யடியேன் எத்தனை செய்தால்

௩௮ பெற்றவ னீகுரு பொறுப்ப தன்கடன்;
பெற்றவள் குறமகள் பெற்றவ ளாமே.

[பதவுரை]

பெற்றவன் = அடியேனைப் பெற்ற தந்தை
நீ = முருகப்பிரானே! நீயே யாகும் ;
குரு நீ = அடியேனுக்குக்குருமூர்த்தியும்நீயே!
குறமகள் = நின் மனைவியாகிய குறவர் குடியில் வளர்ந்த வள்ளியம்மை

| | |
|---|---|
| பெற்றவள் ஆம் | = அடியேனைப் பெற்ற தாயாவள்; |
| பெற்றவள் ஆம் | = அடியேனைப் பெற்ற தாயாவள் (ஆகையால்) |
| அடியேன் | = அடிமையாகிய நான் |
| எத்தனை | = எவ்வளவு |
| குறைகள் | = குறைவான காரியங்களை |
| எத்தனை பிழைகள் | = எவ்வளவு பிழையான காரியங்களை |
| எத்தனை | = எவ்வளவு |
| எத்தனை | = எவ்வளவு |
| செய்தால் | = செய்தாலும் |
| பொறுப்பது | = அவற்றைப் பொறுத்துக்கொண்டருளுவது |
| உன் கடன் | = தேவரீரது கடன்மையாகும். |

[விருத்தியுரை]

1. குறைகள்-'அறத்திற் குறைந்த காரியங்கள்,' 'மனதிற்குக் குறைவான காரியங்கள்' எனப் பொருள் பெறும்.

2. பிழை - தப்பான காரியங்கள்.

3. தந்தையும் குருவும் நீ ஆதலினாலும், வள்ளியம்மை தாயாதலினாலும், மைந்தனாகிய அடியேன் செய்த பிழையைப் பொறுப்பது கடன் என்பார் 'பெற்றவன் நீ குரு பொறுப்பதுன் கடன்' பெற்றவள் குறமகள்' என்றார்.

கூகூ பிள்ளையென் றன்பாய்ப் பிரிய மளித்து
மைந்தனென் மீதுன் மனமகிழ்ந் தருளித்

க00 தஞ்சமென் றடியார் தழைத்திட வருள்செய்
கந்தர் சஷ்டி கவசம் விரும்பிய

[பதவுரை]

| | | |
|---|---|---|
| பிள்ளை யென்று | = | அடியேன் தேவரீருக்குப் பிள்ளை என்று |
| அன்பாய் | = | பிரியத்தோடு |
| மைந்தன் | = | புத்திரனாகிய |
| என்மீது | = | அடியேனாகிய என்மேல் |
| உன் மனம் | = | தேவரீரது திருவுள்ளம் |
| மகிழ்ந்தருளி | = | மகிழ்ச்சி கொண்டருளி |
| பிரியம் | = | அடியேனுக்குப் பிரியமானவைகளை |
| அளித்து | = | அடியேனுக்குக் கொடுத்துக் கிருபை செய்து |
| கந்தா | = | கந்தக்கடவுளாகிய உன் |
| சஷ்டி கவசம் | = | சஷ்டி கவசத்தை |
| விரும்பிய | = | விரும்பிப் படித்தவர்களுக்கும் |
| தஞ்சம் என்று | = | நீயே தஞ்சமென்று வந்தடைந்த |
| அடியார் | = | அடியார்கள் |
| தழைத்திட | = | செழித்து வளர |
| அருள் செய் | = | கிருபையைச் செய்வாயாக! |

[விருத்தியுரை]

1. பிள்ளை - இளமைப் பெயர்.

2. 'பிரியம்' பிரியப்படுவதுமேல் நின்றது; இதுவே 'இட்ட காமியம்' என்பர்; ஆகுபெயர். "பிரியம் பலவரும்" என்றதும் நோக்கத்தக்கது.

3. அளித்தல் கிருபையோடு தருதலாதலின் 'அளித்து' என்றார்.

4. மைந்தன் - மைந்தை யுடையவன் மைந்தன் ; மைந்து-வலிமை.

5. தஞ்சம் - அடைக்கலம்.

6. தழைத்திட - பெருகி வாழ.

கO௧ பாலன் றேவ ராயன் பகர்ந்ததைக்
காலையின் மாலையில் கருத்துட னாளும்.

[பதவுரை]

| | |
|---|---|
| பாலன் | = முருகப்பிரானுக்குப் பாலகனாகிய |
| தேவராயன் | = தேவராயன் என்னும் பெயரை யுடைய அடியேன் |
| பகர்ந்ததை | = சொல்லிய இத் துதியை |
| நாளும் | = தினந்தோறும் |
| கருத்துடன் | = 'நல்வாழ்வு பெறவேண்டும்' என்னும் எண்ணத்துடன் |
| காலையில் | = காலைப்பொழுதிலும் |
| மாலையில் | = மாலைப்பொழுதிலும். |

[விருத்தியுரை]

1. 'தேவராயன்' என்பது இந் நூலாசிரியர் பெயர்.

2. பகர்தல் - சொல்லுதல்.

3. 'காலையில் மாலையில்' இடைநின்ற உம்மை தொக்கது.

4. 'கருத்துடன்' என்பதற்குப் 'பத்தியோடு' எனவும் பொரு ளுரைப்பர்.

கO௨ ஆசா ரத்துடன் அங்கந் துலக்கி
நேச முடனொரு நினைவது வாகிக்

௧௦௫ கந்தர் சஷ்டி கவச மிதனைச்
சிந்தை கலங்காது தியானிப் பவர்கள்.

[பதவுரை]

ஆசாரத்துடன் = பக்தி ஒழுக்கத்துடன்
அங்கம் = சரீரத்தை
துலக்கி = சுத்தப்படுத்திக்கொண்டு
நேசமுடன் = அன்புடனே
ஒரு = ஒரே
நினைவது ஆகி = மன எண்ணத்துடன்
கந்தர் = கந்தக்கடவுளின்
சஷ்டி கவசம் = சஷ்டி கவச துதி ஆகிய
இதனை = இந்நூலை
சிந்தை = மனமானது
கலங்காது = கலக்கமடையாது
நாளும் = தினமும்
தியானிப்பவர்கள் = மனத்தால் துதிப்பவர்கள்.

[விருத்தியுரை]

1. ஆசாரம் - ஆசரிப்பது ஆசாரம்.
2. துலக்கி - நீராடி மாசுபோக்கி விளக்கஞ் செய்தல்.

"அகந்தூய்மை நீரானமையும்"

என்றார் திருவள்ளுவர் ஆதலின்.

3. கலங்காது - மனத்தை ஒரே நிலையில் நிறுத்தி என்பது பொருள்.

௧௦௬ ஒருநாள் முப்பத் தாறுருக் கொண்டு
ஓதியே செபித்து உகந்துநீ றணிய.

[பதவுரை]

ஒரு நாள் = ஒரு தினத்திற்கு
முப்பத்தாறு உருக கொண்டு = முப்பத்தாறு உருவீதம் உள்ளத்திலே கொண்டு
ஓதி = கூறி
செபித்து = ஜெபஞ் செய்து
உகந்து = சந்தோஷத்துடன்
நீறு அணிய = விபூதியைத் தரித்துக் குமாரக்கடவுளை வணங்கித் துதிக்க.

[விருத்தியுரை]

1. ஒரு நாள் - ஒரு நாளைக்கு.
2. 'உரு' என்பது ஒரு முறை ஓதுதலை.

௧௦௫ அஷ்டதிக் குள்ளோர் அடங்கலும் வசமாய்த்
திசைமன்ன ரெண்மர் செயல தருளுவர்.

[பதவுரை]

அஷ்டதிக்கு உள்ளோர் = உலகத்திலே எட்டுத்திக்கிலும் உள்ளார்
அடங்கலும் = எல்லாரும்
வசமாய் = தன்வசப்பட்டவர்களாகி அடங்கிப் பணிய
திசை மன்னர் = திக்குகள் எட்டிற்கும் தலைவர்களாகிய தேவர்கள்
எண்மர் = எட்டுப்பேரும்
செயலது அருளுவர் = தங்கள் கருணைச் செயலைச் செய்வர்கள்.

[விருத்தியுரை]

1. *திசைமன்னர் எண்மர் ஆவார் : இந்திரன், அக்கினி, யமன், வருணன், வாயு, நிருதி, குபேரன், ஈசானன் என்பர்.*

2. *'எண்மர்' என்றது தொகைக் குறிப்பு.*

3. *'அஷ்டதிககுள்ளோர்' என்றதனுல் பூலோகம் முற்றும் என்பது பெற்றும்.*

4. *எட்டுத்திக்குத் தேவரும் அட்டதிக்குள்ளாரும் பவ்வியப் பட்டு நடக்க அருள்புரிவர் என்பது கருத்து.*

5. *'செயல்' என்பது தங்கள் கருணைச்செயல் என்பதாம்.*

கoசு மாற்றல ரெல்லாம் வந்து வணங்குவர்;
நவகோண் மகிழ்ந்து நன்மை யளித்திடும்.

[பதவுரை]

| | |
|---|---|
| *மாற்றலர் எல்லாம்* | = *சத்துருக்கள் எல்லாம்* |
| *வந்து* | = *தாமே வலிது வந்து* |
| *வணங்குவர்* | = *பணிவார்கள்;* |
| *நவகோள்* | = *ஒன்பதுவகைக் கிரகங்களும்* |
| *மகிழ்ந்து* | = *சந்தோஷங்கொண்டு* |
| *நன்மை அளித்திடும்* | = *நன்மைகளைத் தரும்.* |

[விருத்தியுரை]

1. *மாற்றலர் - மாறுபட்ட மனத்தவர்*

2. *நவகோள் - ஒன்பதுவகைக் கிரகங்கள்:—சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, ராகு, கேது.*

கoஎ நவமத னெனவும் நல்லெழில் பெறுவர்;
எந்த நாளுமீ ரெட்டா வாழ்வர்.

[பதவுரை]

| | |
|---|---|
| நவம் | = புதிய |
| மதன் எனவும் | = மன்மதன் என்று கூறுமாறு |
| நல் எழில் | = சிறந்த அழகை |
| பெறுவர் | = பெறுவார்கள்; |
| எந்த நாளும் | = எப்பொழுதும் |
| ஈரெட்டா | = பதினாறு வயதுடையவர்களாகி |
| வாழ்வர் | = வாழ்ந்திருப்பார்கள். |

[விருத்தியுரை]

1. பழைய மதன் உருவில்லாதவன் ஆதலின் 'நவமதன்' என்றார்.

2. நல் எழில்-சிறந்த அழகு; இனி 'நன்மை பயக்கும் அழகு' எனினும் ஆம்.

3. ஈரெட்டா - தொகைக் குறிப்பு. மார்க்கண்டேயர்போல் என்றும் பதினாறாக இருப்பர் என்பதாம்; ஈண்டு மார்க்கண்டேயர் கதை குறிப்பிடத்தக்கது.

௧௦௮ கந்தர்கை வேலாங் கவசத் தடியை
வழியாய்க் காண மெய்யாய் விளங்கும்.

[பதவுரை]

| | |
|---|---|
| கந்தர் | = கந்தக்கடவுளுடைய |
| கை வேலாம் | = திருக்கரத்திலுள்ள வேலை ஒத்த |
| கவசத்து அடியை | = இந்தக் கவசத்தில் உள்ள பா அடியை |
| வழியாய்க் காண | = உபதேச முறையாய்க் கவனித்துப் பார்க்க |

மெய்யாய் விளங்கும் = முருகப்பிரான் உண்மையாக வந்து தோன்றுவர்.

[விருத்தியுரை]

1. கைவேல் எவ்வாறு துன்பநீக்கி இன்பம் அருளுமோ அதுபோல் அருள் செய்தலின் 'கந்தர்கை வேலாங் கவசம்' என்றார்.

2. அடியை - 'ஒரு அடியை' என்று பொருள் கூறுவாரு முண்டு.

3. வழியாய் - ஒழுங்காக; அதாவது, 'உபதேச முறைப்படி' என்று அருத்தம்.

4. மெய்யாய் விளங்கும் - 'உண்மையாக விளக்கத்தைப் பெறுவர்' எனலும் ஆம்.

௧௦௯ விழியாற் காண வெருண்டிடும் பேய்கள்;
பொல்லா தவரைப் பொடிபொடி யாக்கும்.

[பதவுரை]

விழிய = கண்களால்
காண = பார்க்குமளவிலேயே
பேய்கள் = பேய்களும்
வெருண்டிடும் = பயந்து ஓடிவிடும்;
பொல்லாதவரை = சத்துருக்களை
பொடி பொடி = நீறு நீறாக
ஆக்கும் = ஆக்கிவிடும்.

[விருத்தியுரை]

1. பொடி பொடி - மிகுதிப்பொருளில் அடுக்கி வந்தது.

2. 'விழியாற் காண' என்றதனால், 'காண்டலே போதும், வேறு காரியஞ் செய்யவேண்டியதில்லை' என்று குறிப்பித்ததாயிற்று.

3. பொல்லாதவர் - சத்துருக்களை என்க.

கக0 நல்லோர் நினைவில் நடனம் புரியும்
சர்வ சத்துரு சங்கா ரத்தடி.

[பதவுரை]

| | |
|---|---|
| நல்லோர் | = நல்லவர்களுடைய |
| நினைவில் | = எண்ணத்தில் |
| நடனம் | = ஆனந்தக்கூத்து |
| புரியும் | = செய்யும்; |
| சர்வ சத்துரு | = எல்லாப் பகைவர்களையும் |
| சங்காரத்து | = கொலை செய்வதாகிய |
| அடி | = அடிகளாம். |

[விருத்தியுரை]

1. 'நல்லோர்' என்றது மனப்பரிசுத்தமுடையவரை.

2. 'சர்வசத்துரு' என்றது அகப்பகை புறப்பகைகள் இரண்டையும்.

3. 'அடி' என்றது சஷ்டிகவசத்துப் பாவின் அடியை.

கக்க அறிந்தென துள்ளம் அஷ்டலட் சுமிகளில்
வீரலட் சுமிக்கு விருந்துண வாக.

[பதவுரை]

| | |
|---|---|
| அறிந்து | = தெரிந்து |
| எனது | = அடியேனுடைய |

| | | |
|---|---|---|
| உள்ளம் | = | மனம் |
| அஷ்டலட்சுமிகளில் | = | எண்வகை இலக்குமிகளில் |
| வீரலட்சுமிக்கு | = | வீரலட்சுமிக்கு |
| விருந்து | = | புதுமையான |
| உணவாக | = | உணவாகும்படி. |

[விருத்தியுரை]

1. "விருந்து தானே புதுமை மேற்று."
என்றதனால் 'புது' என்று பொருள் கொண்டாம்; ஆகுபெயராய்ப் புதுவராய் வருவோர்மேலும் நிற்கும்.

2. உள்ளம் - இட ஆகுபெயர்.

கசஉ சூரபத் மாவைத் துணித்தகை யதனால்
இருபத் தேழ்வர்க் குவந்தமு தளித்த.

[பதவுரை]

| | | |
|---|---|---|
| சூரபத்மாவை | = | சூரபத்மனை |
| துணித்த | = | வெட்டித் துண்டுபடுத்திய |
| கையதனால் | = | திருக்கரத்தால் |
| இருபததேழ்வர்க்கு | = | இருபத்தேழுபேருக்கு |
| உவந்து | = | சந்தோஷித்து |
| அமுது | = | அமுதத்தை |
| அளித்த | = | கொடுத்த |

[விருத்தியுரை]

1. 'இருபத்தேழ்வர்' என்றது இருபத்தேழு நட்சத்திரப் பெண்களை. ஆறுநட்சத்திரப் பெண்கள் பால்கொடுத்ததினால் இரு

*பத்தேழு நட்சத்திரங்களுக்கும் அமுதளித்து அருள்செய்தனர் என்பது கதை.*

2. *இருபத்தேழ்வர் - தொகைக் குறிப்பு.*

கக௩ குருபரன் பழநிக் குன்றினி லிருக்கும்
சின்னக் குழந்தை சேவடி போற்ற.

[பதவுரை]

*குருபரன் = பரமனுக்கும்குருவாகியகுமரக்கடவுளை*
*பழநிக்குன்றினில் = பழநிமலையில்*
*இருக்கும் = எழுந்தருளி இருக்கும்*
*சின்னக் குழந்தை = சிறிய குழந்தை வடிவமாகிய முருகரின்*
*சேவடி போற்ற = செவந்த பாதங்களைத் துதிக்க.*

[விருத்தியுரை]

1. *சிவபெருமானுக்குக் குருவாகிப் பிரணவப்பொருளை முருகர் உபதேசித்ததால் 'குருபரன்' என்றார்.*

[கந்தபுராணச் சுருக்கம்]

"அந்தணனுக் கருள்புரிந்தே அறுமுகனைக் கவானிடைவைத்
துந்துகுடி லைப்பொருணீ யுரைத்தியென உரைத்ததுகேட்
டெந்தைமகிழ்ந் தருங்கயிலை யெய்தினன் குருமுனிக்குச்
சுந்தரமெய்ப்பொருளைச் சொல்லினன் குமரேசன்."

*என்னும் பாவா லறிக.*

2. *சேவடி - செவந்த பாதம்; செம்மை + அடி - சேவடி.*

கக௪ எனைத்தடுத் தாட்கொள என்றன துள்ளம்
மேவிய வடிவுறும் வேலவ! போற்றி.

[பதவுரை]

| | |
|---|---|
| எனை | = அடியேனாகிய என்னை |
| தடுத்து ஆட்கொள | = தீயவழியிற் செல்லாது தடுத்து ஆட்கொள்ளும்படி |
| என் றனது உள்ளம் | = அடியேனுடைய மனததில் |
| மேவிய | = தங்கியருளி இருக்கின்ற |
| வடிவு உறும் | = அழகு பொருந்திய |
| வேலவ! | = வேலாயுதத்தைக் கையிலே கொண்டருளிய முருகக்கடவுளே! |
| போற்றி | = தேவரீருக்கு நமஸ்காரம். |

[விருத்தியுரை]

1. கருணையே உருவினன் ஆதலின் தீயவழியிற் செல்லாது அடியேன் மனத்தில் தங்கி அருளி இருக்கின்ற என்றார்.

"அறைகூவி வீடருளும்"

என்றது கருதற்பாலது.

கசரு தேவர்கள் சேனு பதியே! போற்றி,
குறமகள் மனமகிழ் கோவே! போற்றி.

[பதவுரை]

| | |
|---|---|
| தேவர்கள் | = தேவர்களுடைய |
| சேனுபதியே! | = சேனைகளுக்கு நாயகனே! |
| போற்றி | = உனக்கு நமஸ்காரம்; |
| குறமகள் | = குறக்குலத்தில் வளர்ந்த புத்திரியாகிய வள்ளியம்மையார் |
| மனம் மகிழ் | = உள்ளங் களிக்கத்தகுந்த |

| | |
|---|---|
| கோவே! | = அரசே! |
| போற்றி | = உனக்கு நமஸ்காரம். |

[விருத்தியுரை]

1. அசுர சங்காரத்தில் தேவர்களுக்குச் சேனாபதியானதால் 'தேவர்கள் சேனா பதியே' என்றார்.

"கோமேவிக் காக்குஞ் சரவணத்தான்"

என்றார் குமரகுருபரரும்.

2. கிரியாசத்தியாகிய வள்ளியாரிடத்துக் குமரர்க்கும், குமாரக்கடவுளிடத்து வள்ளியாருக்கும் அன்பு அதிகம் ஆதலின் 'குறமகள் மனமகிழ்' என்றருளினார்.

3. முருகர், சர்வலோகங்களுக்கும் நாயகன் ஆதலின் 'கோவே' என்றார்.

ககசு திறமிகு திவ்விய தேகா! போற்றி;
இடும்பா யுதனே! இடும்பா! போற்றி.

[பதவுரை]

| | |
|---|---|
| திறம் மிகு | = வல்லமை அதிகரித்த |
| திவ்விய | = இனிமை பொருந்திய |
| தேகா! | = திருமேனியையுடையவனே! |
| போற்றி | = நமஸ்காரம்; |
| இடும்பு | = சத்துருக்களுக்குத் துன்பத்தை யுண்டாக்குகின்ற |
| ஆயுதனே! | = வேற்படையை யுடையவனே! |
| இடும்பா! | = பகைவர்க்குத் துன்பஞ் செய்கின்றவனே! |
| போற்றி | = உனக்கு நமஸ்காரம். |

[விருத்தியுரை]

1. ஜோதி சொரூபன் ஆதலின் 'திவ்விய தேகா!' என்றார். அழகிய வடிவு உடைமைபற்றியே 'முருகன்' என்னுந் திருநாமம் அமைந்ததுங் காண்க.

2. 'இடும்பாயுதனே!' என்றதற்கு 'இடும்பனைத் தனக்கு ஆயுதமாகக் கொண்டவனே!' எனறலும் ஆம். பழநித்தலந் திருப்புராணம், இருபதாவது: மலைகள் பழநி அடைந்த சருக்கத்தின்படி, 'இடும்பன்' முருகருக்குத் தொண்டனும் வேலைக்காரனும் ஆனமை அறியலாம். வேலைக்காரன் என்றது மரபு.

கஎ கடம்பா! போற்றி; கந்தா! போற்றி;
வெட்சி புனையும் வேளே! போற்றி.

[பதவுரை]

| | |
|---|---|
| கடம்பா | = கடப்பமலர் மாலையைத் தரித்தவனே! |
| போற்றி | = நமஸ்காரம்; |
| கந்தா! | = கந்தசுகடவுளே! |
| போற்றி | = நமஸ்காரம்; |
| வெட்சி | = வெட்சிமலர்மாலையை |
| புனையும் | = தரித்துக்கொள்ளுகின்ற |
| வேளே! | = குமாரக்கடவுளே! |
| போற்றி | = நமஸ்காரம். |

[விருத்தியுரை]

1. கடம்பமலர்மாலை முருகர்க்கு அதிக விருப்புடையது ஆதலின் 'கடம்பா!' என்றார்.

"புதுப்பூங் கடம்பு"

என்ற திருமுருகாற்றுப்படையானும் அறிக.

"தலைப்பெய றலைஇய தண்ணறுங் கானத்து
இருள்பூந் தண்டார் புரளும் மார்பினன்."

இதுவும் திருமுருகாற்றுப்படை.

2. வெட்சி - இதுவும் முருகர்க்கு விருப்புடைய மலர்.

"செங்கால் வெட்சி சீறித ழிடையிடுபு,"

என்பது திருமுருகாற்றுப்படை.

3. வேள் - விருப்பம்; விருப்பைச் செய்யும் அழகுடையவன் ஆதலின் 'வேளே!' என்றார்.

கஅ உயர்கிரி கனக சபைக்கோ ரரசே!
மயினட மிடுவோய்! மலரடி சரணம்.

[பதவுரை]

| | |
|---|---|
| உயர் | = உயர்வாகிய |
| கிரி | = கந்தகிரியிலே பொருந்திய |
| கனகம் | = பொன்னாற் சமைந்த |
| சபைக்கு | = சபாமண்டபத்திற்கு |
| ஓர் | = ஒப்பில்லாத |
| அரசே! | = நாயகனே! |
| மயில் | = மயில் வாகனத்தில் ஆரோகணித்து |
| நடம் இடுவோய்! | = நிர்த்தனம் புரிபவனே! |
| மலர் அடி | = (நினது) தாமரைமலர்போன்ற திருவடிகள் |
| சரணம் | = எனக்குத் தஞ்சமாம். |

[விருத்தியுரை]

1. கிரி - முருகன் மேவிய கந்தக்கிரி.

2. முருகப்பிரான் முதன்முதல் மேவியதாதலான் 'உயர் கிரி' என்றார்; இது வினைத்தொகை.

3. கனகசபை - இது அக கிரியின்கண் உள்ள சபையை; இது பொன்னால் மயனாற் செய்யப்பெற்றது.

4. மயினடமிடுவோய்! - 'மயில்மேலேறி நடனமிடும் இறைவன்' என்பது பொருள்.

ககக சரணஞ் சரணஞ் சரஹண பவஓம்!
சரணஞ் சரணஞ் சண்முகா! சரணம்.

[பதவுரை]

| | |
|---|---|
| சரஹணபவஓம் | = சரவணபவஓம் என்னும் சடாட்சர மந்திரப் பொருளே! |
| சண்முகா! | = ஆறு திருமுகங்களை உடையவரே |
| சரணம் | = உனக்கு நமஸ்காரம்; |
| சரணம் | = உனக்கு நமஸ்காரம்; |
| சரணம் | = உனக்கு நமஸ்காரம்; |
| சரணம் | = உனக்கு நமஸ்காரம்; |
| சரணம் | = உனக்கு நமஸ்காரம். |

[விருத்தியுரை]

1. 'ஓம்' ஆறெழுத்தோடு அமைத்துக் கூறப்பெற்றது; இது முனும் பின்னுஞ் சேர்க்கப்பெறும்; இதனை 'ராஜமந்திரம், மந்திராஜம், குண்டலி, பிரணவம், மூலம் என்பனவாதிப் பெயர்கள கூறுவர்.

2. சரணம் - மகிழ்ச்சியால் பன்முறை அடுக்கியது.

**கந்தர் சஷ்டி கவசம் மூலமும்** க
**மெய்ப்பொருள் விளக்க விருத்தி உரையும்**
**முற்றுப்பெற்றன.**

---

உ

முருகக்கடவுள் துணை

வேலுமயிலுந் துணை

# முருகர் துதிமஞ்சரி



## விநாயகர் துதி

### வெண்பா

திருவாக்குஞ் செய்கருமங் கைகூட்டுஞ் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கு—முருவாகு
மாதலால் வானோரு மானை முகத்தானைக்
காதலாற் கூப்புவர்தங் கை.

## [ஸ்ரீ சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள் அருள்வாக்கு]

ஆறுமுகப் பெருங்கருணைக் கடலே! தெய்வ
யானைமகிழ் மணிக்குன்றே! அரசே முக்கட்
பேறுமுகப் பெருஞ்சுடர்க்குட் சுடரே! செவ்வேல்
பிடித்தருளும் பெருந்தகையே! பிரமஞானம்
வீறுமுகப் பெருங்குணத்தோ ரிதயத் தோங்கும்
விளக்கமே! ஆனந்த வெள்ள மே!முன்
றேறுமுகப் பெரியவருட் குருவா யென்னைச்
சிறுகாலை யாட்கொண்ட தேவ தேவே!

பன்னிருகண் மலர்மலர்ந்த கடலே! ஞானப்
பாஞ்சுடரே! ஆறுமுகம் படைத்த கோவே!
எண்ணிருகண் மணியே!எங் தாயே! என்னை
யீன்றானே! என்னரசே! என்றன் வாழ்வே!
மின்னிருவர் புடைவிளங்க மயின்மீ தேறி
விரும்புமடி யார்காண மேவுந் தேவே!
சென்னியினின் னடிமலர்வைத் தென்னை முன்னே
சிறுகாலை யாட்கொண்ட தேவ தேவே!

## ஸ்ரீ சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள் அருள்வாக்கு.

சீர்பூத்த அருட்கடலே! கரும்பே! தேனே!
செம்பாகே எனதுகுல தெய்வமே!நற்
கூர்பூத்த வேன்மலர்க்கை யரசே! சாந்த
குணக்குன்றே! தணிகைமலைக் கோவே! ஞானப்
பேர்பூத்த நின்புகழைக் கருதியேழை
பிழைக்கவருள் செய்வாயோ பிழையை நோக்கிப்
பார்பூத்த பவத்திலுற விடினென் செய்கேன்
பாவியே னந்தோவன் பயர்தீ ரேனே.

தீராத துயர்க்கடலி லழுந்தி நாளுந்
தியங்கியழு தேங்குமிந்தச் சேய்க்கு நீகண்
பாராத செயலென்னே! எந்தா யெந்தாய்!
பாவியெனை விட்டனையோ பன்னாளாக
வராய வருடருவா யென்றே யேமாந்
திருந்தேனே; எனசெய்கேன்; யாரு மில்லேன்;
சீராருந் தணிகைவரை யமுதே! ஆதி
தெய்வமே! நின்கருத்தைத் தெளிந்தி லேனே.

குழகனை, அழியாக் குமரனை, அட்ட
குணத்தனைக், குறித்திட லரிதாம்
அழகனைச், செந்தி லப்பனை, மலைதோ
றுடல்வா ழண்ணலைத், தேவர்
கழகனைத், தண்டை காலனைப், பிணிக்கோர்
காலனை, வேலனை, மனதிற்
சழகிலார்க் கருளுஞ் சாமிநா தனைத்தென்
றணிகையிற் கண்டிறைஞ் சுவனே.

Printed at the Guardian Press, 158-B, Broadway, Madras—1926.